
Parle-G

# மங்கை

ஏப்ரல் '95

முழுக்க முழுக்க வண்ணத்தில்...
புதிய மாறுதல்களுடன்!

- ❋ ஏசு உயிர்த்தெழுந்தார் *-கவிஞர் கண்ணதாசன்*
- ❋ அம்மா *-அனுராதா ரமணன்*
- ❋ நம்பிக்கை ஜெயிக்கும் *-அன்புநெஞ்சன்*
- ❋ அர்த்தமுள்ள காரணங்கள் *- லட்சுமி ராஜரத்தினம்*
- ❋ சித்த வைத்திய பதில்கள் *-டாக்டர் இரா. கண்ணன்*
- ❋ இளமையின் ரகசியம் *-மனோரமா*
- ❋ ஏப்ரல்'95 ராசிபலன்கள் *- ஆர். பட்டம்மாள்*
- ❋ தூங்கலாம் வாருங்கள் *-கிருஷ்ணா வேணுகோபாலன்*
- ❋ ஆடை அழகுக் கலை *- 'பவித்ராஸ்' உமா சரவணன்*
- ❋ தெய்வச் செயல் – வாசகர்களின் மெய்சிலிர்க்க வைக்கும் ஆன்மீக அனுபவங்கள்
- ❋ சுவையே தனி *-சமையல் பகுதி*

மற்றும்

ஆன்மீகப் புதிர் பரிசு ரூ.1000/-

விலை ரூ.8/-


Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!








It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.



From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !






CHANDAMAMA

COLLECTION

ARTIG1246



# அம்புலிமாமா

ஏப்ரல் 1995



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 5-00.

வருட சந்தா ரூ. 60-00.




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## உண்மையான கல்வி

இப்போது பல மாணவ, மாணவிகள் தம் ஆண்டுத் தேர்வுகளை எழுதி முடித்திருப்பார்கள். இந்தத் தேர்வு களில் தேறித்தான் அவர்கள் மேல் வகுப்பிற்குச் செல்ல முடியும்.

ஒரு ஆண்டில் ஒரு மாணவன் எவ்வளவு கற்றுக் கொண்டான் என்பதைக் காண இந்தத் தேர்வுகள்தாம் உண்மையான அளவு கோல்களா? இதுபற்றி ஆராய அரசாங்கத்தின் தரப்பில் ஒரு ஆய்வுக் குழு அமைக்கப் பட்டது. இதன் கணிப்பின்படி மாணவர்கள் மேல் வகுப்புகளுக்குச் செல்ல செல்ல அவர்கள் கற்பது குறைந்து கொண்டே போகிறது என்பது தெரிகிறது. இக்குழு ஆண்டுத் தேர்வுகளில் மாணவர்கள் பெற்ற மதிப்பெண்களை மதிப்பீட்டில் சேர்க்கவில்லை.

இக்குழு 20 மாநிலங்களுக்குப் போய் 60,000 மாண வர்களை கண்டது. மாணவர்கள் தேர்வுகளில் வெற்றி பெற மட்டுமே குறிப்பிட்ட பகுதிகளைப் படித்து மதிப் பெண்கள் பெற்று விடுகிறார்கள் என்பது இதன் கருத்து. அவர்கள் தாம் படித்ததைத் தவிர வேறு எதையும் அறிய முயல்வதில்லை, மேலும் நகரில் வாழும் மாண வர்கள் கிராம மாணவர்களை விடச் சற்று விவரம் தெரிந்தவர்களாக உள்ளனர், மாணவர்களை விட மாணவியர்கள் நன்கு படிக்கிறார்கள் என்பன இக்குழு கண்டறிந்த சில விஷயங்கள். முடிவில் இக்குழு ஆசிரி யர்களின் திறமையைப் பொறுத்துதான் மாணவர்களின் அறிவு வளர்கிறது எனவும் கூறியுள்ளது.



மதிமுகம் : 96 ஏப்ரல் 1995 புன்னகை : 4

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



செய்திகளும் தகவல்களும்:

# ஸ்வீடனில் சோஷல்டெமக்ரட்கள்

**தா**யும் தந்தையும் வேலை பார்க்கப் போய் விட அவர்களது குழந்தை நோய் வாய்ப்பட்டால் அதனைக் கவனிப்பது யார்? இதற்கு ஏதோ ஒரு வழியை கூறி விடலாம். ஆனால் ஸ்வீடனின் அரசாங்கம் ஒரு ஏற்பாட்டைச் செய்துள்ளது. இப் படிப்பட்ட நிலையில் அக்குழந்தையின் தந்தையே அக்குழந்தையின் அருகே இருந்து அதனை கவனித்துக் கொள்ள வேண்டும். அந்த நாட்களுக்கு அவர் பணி புரியச் சென்றதாகக் கருதி அந்நாட்களுக் கான சம்பளத்தை அரசாங்கமே கொடுத்து விடுகிறது. ஸ்வீடனில் ஆட்சியிலுள்ள அரசாங்கம் மக்கள் நலம் கருதும் அர சாங்கம். அதனால் இப்படிச் செய்ய முடிகிறது.

குழந்தைப் பருவத்திலிருந்து முதியவர் ஆகும் வரை மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய அரசாங்கமே முயல்கிறது. வேலையற்றவர்களுக்குக் கூட உதவித் தொகை வழங்குகிறது. இதெல்லாம் எவ் வாறு முடியும் என்று நீங்கள் ஆச்சரி யப்படலாம். சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் 1932ல் சோஷல் டெமகிரட் கட்சி ஆட்சிக்கு வந்தது. இடையில் ஆறாண்டு காலம்தான் அது பதவியில் இருக்க வில்லை. அவ்வளவு ஆண்டுகளாக அக் கட்சிதான் ஆளும் கட்சியாக இருந்தது.

அதிகாரத்திற்கு வந்த இக்கட்சி நிலை யானதும் மக்கள் நலனுக்காக பல திருத் தங்களைச் செய்தது. வேலை வாய்ப்பை அதிகரிக்கத் தனியார் துறைக்கு ஊக்கம் அளித்தது. மக்கள் யாவரும் சுகமாக இருக்க வரிகளை அதிகரித்தது. தொழி லாளர் நலன் காக்கத் தொழிற் சங்கங்களை நிறுவ ஊக்கம் அளித்தது. எல்லாத் துறைகளிலும் இந்த ஆட்சி முன்னேற்றம் கண்டது.

எதிர்க் கட்சிகளான கன்சர்வெடிவ் களும் லிபரல்களும் இவர்களை விமர்சித் தனர். 1986ல் பிரதம மந்திரியாக இருந்த ஒலாப் பாமே கொலை செய்யப்பட்டார். இங்குவர் கார்ல்ஸெல் சோஷல்டெமக்ரட் கட்சித் தலைவரானார். 1991ல் நடந்த தேர்தலில் அக்கட்சி தோற்றது. கன்செர் வெடிவ்களும் லிபரல்களும் கார்ல் பிட் தலைமையில் அரசாங்கம் அமைத்து மக் கள் நலத் திட்டங்களை ரத்து செய்தனர். நாட்டில் வேலையற்றோர் எண்ணிக்கை அதிகமாயிற்று. மக்கள் எதிர்ப்பு வலுப் பட்டு 1994ல் நடந்த தேர்தலில் அவர்கள் சோஷல் டெமகிரட் கட்சியை அதிகாரத்தில் அமர்த்தினார்கள்.

கார்ல்ஸெல் மீண்டும் பிரதம மந்திரி யானார். இதில் குறிப்பிடத்தக்கது இப் போதும் ஸ்வீடன் மன்னராட்சியில்தான் இருக்கிறது என்றாலும் அவர் ஆட்சியில் தலையிடுவது இல்லை.





# வியாபாரம் புரிந்தது!

ரத்தினம் என்பவனின் தந்தை அரசாங்கத்தில் பணிபுரிந்து நிறையப பணம் சம்பாதித்தான். அவன் தன் மகனையும் அரசாங்க உத்தியோகம் பார்க்கும்படிக் கூறினான். ஆனால் ரத்தினமோ தனக்கு வியாபாரத்தில் தான் விருப்பம் எனக் கூறினான்.

'வியாபாரம் செய்வது எளிதல்ல அதன் நெளிவு சுளிவுகளை எல்லாம் நன்கு தெரிந்திருக்க வேண்டும். நம் குடும்பத்தில் யாருக்கும் அந்த அனுபவம் கிடையாது. எனவே வியாபாரம் நமக்கு வேண்டாம்" என்று அவனது தந்தை சொல்லிப் பார்த்தான். கேட்கவில்லை. மேலும் ரத்தினத்தின் தாய் "இவன் மாமா வியாபாரம் செய்து அமோகமாகச் சம்பாதிக்கவில்லையா? அவன் எந்த விதத்தில் குறைந்து விட்டான்? கைநிறையச் சம்பாதிக்கிறான். ஊரில் பல கடைகள் அவனுக்குச் சொந்தம். கிடைத்த லாபத்தில் வீடு, வயல் என்று நிறைய வாங்கிப் போட்டிருக்கிறானே" என்றாள்.

ரத்தினத்தின் தந்தையும் "உன் தம்பி உலகநாதனைப் பற்றியா கூறுகிறாய்? அவன் தன் சொந்த மகனுக்குக் கூட வியாபாரத் தந்திரங்களைக் கற்றுக் கொடுக்க மாட்டான். அவனால் ரத்தினத்திற்கு ஒரு பயனும் ஏற்படாது" என்றான்.

ரத்தினத்தின் தாயோ "என் தம்பி ஒன்றும் அப்படிப்பட்டவன் அல்ல. அவன் தன் வியாபாரத்தை எல்லாம் தன் மகனிடம் ஒப்படைத்து விட்டு இப்போது மளிகைக் கடையை மட்டும் நடத்தி வருகிறான். தன் மகளை நம் ரத்தினத்திற்குக் கட்டி வைக்க வேண்டும் என்று அவன் விரும்புகிறான். அவனிடம் ரத்தினத்தை அனுப்பினால் அவன் வியாபார நுணுக்கங்களை எல்லாம் நம் மகனுக்

-சிவனார் செல்வன்-

குக் கற்றுக் கொடுத்து விடுவான்" என்றாள்.

ரத்தினத்தின் தந்தையோ "நீ என்னமோ உன் தம்பியைத் தலை மேல் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடுகிறாய். அவன் பக்கா சுயநலக்காரன். ரத்தினத்திற்கு எதுவுமே சொல்லிக் கொடுக்க மாட்டான்" என்றான்.

அப்போது ரத்தினம் "நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நானே வியாபார நுணுக்கங்களை யாருடைய உதவியும் இல்லாமல் கற்று முன்னேறுகிறேன்" என்றான். அவனது தந்தையோ "தாராளமாகச் செய். ஆனால் நான் பைசா கொடுக்க மாட்டேன். தெரிந்ததா?" என்றான்.

ரத்தினமோ "எனக்கு யாரும் பணம் கொடுக்க வேண்டாம். என் அறிவே எனக்குப் போதும். நானே வியாபார நுணுக்கங்களை எப்படியாவது கற்றுக் கொண்டு நீங்களெல்லாம் ஆச்சரியப்படும்படி செய்கிறேனா இல்லையா என்று பாருங்கள். ஒரு வருட காலம் கழித்து நான் ஒரு நல்ல வியாபாரியாக வருவேன்" என்று கூறி விட்டுக் கிளம்பினான்.

வழியில் அவன் ஒரு சாதுவைக் கண்டான். அவரை வணங்கி அவரது ஆசியைக் கோரவே அவர் "தட்சணை கொடு" என்றார். ரத்தினமோ "முற்றும் துறந்த உங்க




ளுக்குப் பணம் எதற்கு?" என்று கேட்டான். அவரும் "பணத்திற்காகத் தான் இந்த வேஷம். நான் படித்தவனல்ல. எந்த வேலையும் செய்யத் தெரியாது. அதனால் இந்த வழியை மேற்கொண்டேன்"என்றார்.

"அப்படியானால் இதுவும் ஒரு வியாபாரமா?" என்று ரத்தினம் கேட்கவே அவரும் "உலகில் நடப்பது எல்லாம் வியாபாரமே. பெயர் தான் வித்தியாசப்படுகிறது. என் வியாபாரத்தில் நீயும் சேர்ந்து பார். நான் எப்படி முன்னேறுகிறேன் என்பதை நீயே காண்பாய்" என்றார்.

ரத்தினமும் பரீட்சார்த்தமாக அதற்கு ஒப்புக் கொண்டான். சாது நகரில் நான்கு பாதைகள் கூடு

மிடத்தில் ஒரு கூடாரத்தைப் போட்டார். அவர் உரத்த குரலில் "நான் பாவிகளின் பாவங்களைக் கரைப்பேன். பாவங்கள் அழிந்ததும் நீங்கள் புண்ணியவான்களாகி விடுவீர்கள்" என்று கூவினார். தம்மைக் காண வந்தவர்களிடம் அவர் பணம் வாங்கிக் கொண்டு பாவங்களைக் கரைப்பதாக அவர் அறிவித்தார். அவர் பெயரும் பாவனானந்தர் என்றாகியது. ரத்தினமும் சன்னியாசி வேடம் அணிந்து அவரது சீடனானான்.

மயில் துத்தத்தில் நீர் இருப்பதால் அது நீல நிறமாகத் தெரிகிறது. அதைச் சூடாக்கினால் அதிலுள்ள நீர் ஆவியாகிப் போய் விட அது வெள்ளை நிறப் பொடியாகிறது. அப்பொடி மீது தண்ணீர் தெளித்தால் அது மீண்டும் நீலமாகி மயில் துத்தமாகிவிடும். இதைக் கொண்டு பாவனானந்தர் தன் வேலைத்தனத்தைக் காட்டினார்.

அவர் தன்னைக் காணவருபவன் கையில் வெள்ளைப் பொடியைப் போட்டு அவனை கண்ணை மூடிக் கொள்ளச் சொல்வார். அதன் மீது நீர் தெளித்து அவனைக் கண்ணைத் திறந்து பார்க்கச் சொல்வார். அவன் தன் ்கையில் நீலப் பொடி இருப்பதைக் காண்பான். அப்பொடியை அருகில் வைத்து சூடாக்கப்பட்ட தோசைக்கல்லின் மீது போடச் சொல்வார். அது மீண்டும் வெளுப்பாகும்.

அப்போது அவர் "வெள்ளைப் பொடி உன் கையில் போனதும் உன் பாவத்தால் அது நீலமாக



மாறியது. நீ அதை தோசைக்கல்லின் மேல் போட்டதும் உன் பாவம் மறைந்து முன்போல் வெள்ளை யாகியது. உன் பாவம் போய்விட்டது" என்பார். அவனும் திருப்தி அடைந்து தட்சிணையாகப் பணம் கொடுத்து விட்டுச் செல்வான்.

பாவனாந்தரின் இந்த அதிசயச் செயல் பற்றி நகர் முழுவதும் ஒரே பேச்சாக இருந்தது. எல்லோரும் தாம் செய்த பாவச் செயல்களை எண்ணி அவற்றைப் போக்கிக் கொள்ள அவரிடம் வந்தார்கள்.

எப்போது பார்த்தாலும் பாவ னானந்தரின் கூடாரத்தின் முன் கூட் டம் இருந்து கொண்டே இருந்தது. அவருக்கும் நல்ல வருமானம் கிடைத் தும் வந்தது. ரத்தினம் "போதும் இந்த ஏமாற்று வேலை. அதிகமாக ஆசைப்பட்டால் கஷ்டப்பட வேண்டி வரும். நம் ரகசியத்தைத் தெரிந்து கொண்டால் நம் பாடு திண்டாட்டம் தான். உலகில் நம்மை விட அறிவாளி களும் இருக்கிறார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள் அவர்கள் இந்த ரகசியத்தை பகிரங்கப்படுத்தி விட் டால் ஜனங்கள் நம்மைச் சும்மா விட்டு விடுவார்களா?" என்று கேட் டான்.

இதைக் கேட்ட சாது கோபம் கொண்டு "நான் உன்னை என் கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்ட தற்கு இப்படியா நீ எனக்கு அறி வுரை கூறுகிறாய்! இதோ பார் மொத்தம் லட்சம் ரூபாய் கிடைத் திருக்கிறது. நீ இதில் பாதியை





எடுத்துக் கொள். இனி நாம் பிரிந்து செல்வோம்" என்றார்.

ரத்தினமோ "எனக்கு இவ்வளவு பணம் வேண்டாம். இது பாவப் பணம். எனக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுங்கள். பாவம் கொஞ்சமாக இருக்கட்டும்" என்றான் சாதுவும் அவன் கேட்ட பணத்தைக் கொடுத்து அனுப்பினார்.

ரத்தினம் சன்னியாசி வேஷத்தைக் கலைத்து விட்டு தன் மாமன் உலக நாதனைக் காணச் சென்றான். அப் போது உலகநாதன் தன் மளிகைக் கடையில் இருந்தான். தன்னை அடை யாளம் கண்டு கொள்ளவில்லை என்று உறுதி செய்து கொண்டு ர்த்தினம் அவனிடம் "ஐயா! எனக்கு உலர்ந்த பேரீச்சை வேண்டும் விலை யைப் பற்றிக் கவலை இல்லை" என்றான்.

அவனது மாமன் அவனை அடை யாளம் கண்டு கொள்ளவில்லை. அவன் ரத்தினத்திடம் "உங்களுக்கு இன்னமும் ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டான். அவனும் "இன் னும் பல சாமான்கள் வேண்டும். முதலில் நான் கேட்ட பேரீச்சை இருக்கிறதா அல்லது இல்லையா என்று சொல்லுங்கள்" என்று கேட்டான்.

மாமன் உடனே "ஏய் முருகா!" என குரல் கொடுக்கவே உள்ளே இருந்து பதினைந்து வயதான சிறு வன் ஒருவன் வந்தான். அவனிடம் உலகநாதன் "உலர்ந்த பேரீச்சை இருக்கிறதா?" என்று உரக்கக் கேட் கவே அவனும் இருக்கிறது என் றான். உடனே அவன் "ஐயா. எவ்வ ளவு கேட்கிறாரோ அவ்வளவு கட்டிக் கொடு" எனக் கூறவே அச் சிறுவன் உள்ளே போனான்.

அடுத்து உலகநாதன் "ஏய் குப்பா" எனக் குரல் கொடுக்கவே இன் னொரு சிறுவன் இருந்தான். அவனிடம் "ஐயாவிற்கு என்னென்ன சாமான்கள் வேண்டுமோ கட்டிக் கொடு" என்றான். சற்று நேரத்திற்குப் பின் முருகன் வந்து "ஒரு மூட்டை உலர்ந்த பேரீச்சை இருந்ததே. அந்த மூட்டை எங்கே என்று தெரிய வில்லை" என்றான்.

“இதைச் சொல்ல இவ்வளவு நேரமா?” என்று உலகநாதன் கூறி விட்டு ரத்தினத்திடம் “எங்கள் கடை யில் இல்லாத சாமான் இந்த ஊரில் வேறு எந்தக் கடையிலும் கிடைக்காது. உங்களைக் காக்க வைத்து விட்டேன். மன்னிக்க வேண்டும்” என்றான் குழைந்தவாறே.

“இது முதலிலேயே தெரிந் திருந்தால் நன்றாய் இருந்திருக்குமே முதலில் பையன் இருக்கிறது என் றான். பிறகு இல்லை என்கிறான். அதைத் தேட இவ்வளவு நேரமா?” என்று கேட்டான் ரத்தினம்.

உலகநாதனும் சலித்துக் கொண்டே “இந்தப் பையன்களே இப்படித்தான். எதையும் வைத்த இடத்தில் இருக்க விடுவதில்லை. எல்லாம் கடனுக்கு வேலை செய்கிறார்கள். வந்து சேரும் போது சுறு சுறுப்பாய் இருக்கிறார் கள். அப்புறம் சோம்பேறிகளாகி விடுகிறார்கள். இவர்களை வைத் துக் கொண்டுதான் தொழிலையும் நடத்த வேண்டி இருக்கிறது. இவனும் வேலை செய்தால்தானே சாப்பாட்டுக் காசு கிடைக்கும். ரொம் பவும் கடுமையாக இல்லாமல், போனால் போகிறது என்று விட்டுப் பிடிக்க வேண்டி இருக்கிறது” என் றான்.

ரத்தினமும் “சரி. இந்த முருக னுக்கு இவ்வூரிலுள்ள உலகநாதன் என்ற வியாபாரியின் வீடாவது தெரி யுமா? இந்த சாமான்களை எல்லாம்




அவர் வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். அவர் என் மாமா” என்றான். உலகநாதன் திடுக்கிட்டு தன் இருப்பிடத்திலிருந்து எழுந்து வந்து “அடே! ரத்தினமா நீ! அடை யாளமே தெரியாமல் வளர்ந்து விட் டாயே. வா வீட்டிற்குப் போகலாம்” என்றான்.

“கடையை இப்படியே விட்டு விட்டா?” என்று ரத்தினம் கேட்கவே உலகநாதன் “எல்லாம் முருகன் பார்த்துக் கொள்வான். கெட்டிக் காரப் பயல். அவனால்தான் கடையே நடக்கிறது. அதனால் எனக்குக் கவலை இல்லை முன்பு அவனைப் பற்றிக் கூறியதெல்லாம் வெளியாருக் காக” என்றான்.

ரத்தினம் "அப்படியானால் பேரீச்சம்பழ விவகாரம்?" என்று கேட்கவே உலகநாதன் சிரித்துக் கொண்டே "அது வந்த கிராக்கியை விடாமல் இருப்பதற்குத்தான் நீ இன்னமும் பல சாமான்கள் வேண்டும் எனவே இன்னொரு பையனைக் கொண்டு பொட்டலம் கட்டச் சொன்னேன். முருகன் பின்புற வழியாகப் போய் உலர்ந்த பேரீச்சை வேறு கடைகளில் கிடைக்குமா எனப் பார்த்து விட்டு வந்தான். எந்தக் கடையிலும் இல்லை" என்றான்.

"அப்படியானால் வியாபாரம் என்பது இப்படிப்பட்ட தகிடுதத்த வேலை நிரம்பியதா? நானும் ஒருவருடன் கூட்டு சேர்ந்து ஒரு வியாபாரம் செய்தேன்" என்று தன் கதையைக் கூறினான். உலகநாதன் "நான் சரக்குகளில் கலப்படம் செய்தோ விலையை ஏற்றியோ விற்பதில்லை. வரும் கிராக்கி நழுவிப் போய் விடாமல் சாமர்த்தியமாகப் பேசி விற்கிறேன்" என்றான்.

ரத்தினமும் "நான் வியாபாரம் செய்து முன்னுக்கு வந்து காட்டுவதாகச் சவால் விட்டு வீட்டை விட்டுக் கிளம்பி வந்தேன். இப்போது என்ன செய்வது?" என்று கேட்டான். உலகநாதனும் "உன் அறிவைப் பயன்படுத்தி வியாபாரம் செய். அதிக லாபத்திற்கு ஆசைப்படாமல் பிறருக்கு உதவ வியாபாரம் செய். நான் எப்படிக் கடை நடத்தி வருகிறேன் என்பதை நீ உன் சுயமுயற்சியால் தெரிந்து கொண்டாய். நீ மேலும் சில விஷயங்களை என்னிடமிருந்து தெரிந்து கொள்ளலாம்" என்றான்.

ரத்தினம் தன் மாமனோடு கொஞ்ச நாள் இருந்து வியாபார முறைகளைக் கற்று கொண்டான். பிறகு தனியே வியாபாரம் செய்து பணம் சம்பாதித்துக் கொண்டு ஒரு வருடத்திற்குப் பின் தன் ஊருக்குப் போய்த் தன் பெற்றோர்களைக் கண்டான். அவர்களும் அவனது முன்னேற்றம் கண்டு அவனைப் பாராட்டினார்கள்.






## 6

*கிரேக்கர்கள் ஒன்பது ஆண்டுகள் ட்ராய் நகரை முற்றுகையிட்டும் பெரிய போர் எதுவும் நிகழவில்லை. கிரேக்கப் படைத் தலைவர்களில் ஒருவனான வஜ்ஜிரகாயன் ட்ராய் மன்னனின் மகளான பிரமோதினியை மணக்க விரும்பினான். கிரேக்கர் பக்கத்தை விட்டு விலகினால் பிரமோதினி கிடைக்கலாம் என்ற நிலை கூட ஏற்பட்டது. வஜ்ஜிரகாயன் ராஜராஜனுடன் ஏதோ ஒருகாரணத்தால் மனத்தாங்கல் கொண்டு போர்க்களத்தை விட்டே சென்றான். அச்செய்தி கேட்டு ட்ரோஜன்கள் உற்சாகம் கொண்டு கிரேக்கர்களைத் தாக்கி அவர்களது ஒரு கப்பலுக்குத் தீ மூட்டினார்கள். பிறகு-)*

சந்திரப் பிரபனின் கப்பல் எரிவது கண்டு வஜ்ஜிரகாயன் ஆத்திரப்பட்டான். தான் போரிடுவதில்லை என்ற முடிவை மாற்றிக் கொண்டு அவன் தன் படையை கிரேக்கர்களுக்கு உதவ அனுப்பினான்,

பித்ருகீர்த்தி என்ற கிரேக்க வீரன் கப்பலை எரித்த ட்ரோஜன் வீரர்கள் மீது ஒரு ஈட்டியை வேகமாக எறிந்தான். அது ஒரு வீரனைத் தாக்கி அவனைக் கொன்றது. அது கண்டு ட்ரோஜன்கள் வஜ்ஜிரகாயன்தான் போர்புரியத் திரும்பி வந்து விட்டான் என்று எண்ணி பயந்து போய்ப் போர்க்களத்திலிருந்து ஓடி விட்டார்கள்,

ட்ரோஜன்களுக்கு உற்சாக மூட்டி போர்க்களத்தை விட்டு ஓடாமல் செய்ய ஒரு படைத்தலைவன் கூட இல்லை, வீரசிம்மன் படுகாய




மடைந்து போர்க்களத்தை விட்டுப் போனது வேறு ட்ரோஜன்களைக் கலக்கி விட்டது.

ட்ரோஜன்களை கதி கலங்க வைத்த பித்ருகீர்த்தி எரிந்து கொண்டிருந்த சந்திரப்பிரபனின் கப்பலின் தீயை அணைத்தான். போர்களத்தை விட்டு ஓடிக் கொண்டிருந்த ட்ரோஜன்களை விரட்டிச் சென்றான். அவன் வஜ்ஜிரகாயன் அணியும் கவசத்தை அணிந்திருந்ததால் ட்ரோஜன்கள் அவன் வஜ்ஜிரகாயனே என்று நினைத்து விட்டனர்,

ட்ராய் நகரை அன்று எப்படியாவது கைப்பற்றி விட வேண்டுமென்று பித்ருகீர்த்தி முயன்றான், அவன் கோட்டை மதில் மீது ஏற மூன்று முறை முயன்றான். ஆனால் ட்ரோஜன்கள் அவனது முயற்சியை முறியடித்தனர்,

இருட்டிய போதிலும் போர் நடந்து கொண்டே இருந்தது. அப்போது ஒருவன் பித்ருகீர்த்தியின் தலையில் ஓங்கி அடித்தான். அவனது தலைக்கவசம் நசுங்கி விழுந்தது. அவனது கையிலிருந்த ஈட்டியும் கீழே விழுந்து விட்டது. அப்போது போர்க்களத்திற்கு வந்த வீரசிம்மன் பித்ருகீர்த்தியைத் தன் வாளால் தாக்கிக் கொன்றான். அவன் அணிந்திருந்த கவசத்தை வீரசிம்மன் எடுத்துப் போய் விட்டான்,

பித்ருகீர்த்தி இறந்தது கிரேக்கர்களுக்குப் பெருத்த இழப்புதான். வஜ்ஜிரகாயன் வேறு போர்க்களத்தில் இல்லாதது அவர்களது வலது கையே போனது போல இருந்தது. அவர்கள் சற்றுக் கலங்கித்தான் போனார்கள். அடுத்து என்ன செய்வது என்றும் கவலைப்படலானார்கள்.

பிரதாபனும் பூதவனும் போர்க்களத்திலிருந்து பித்ருகீர்த்தியின் உடலை எடுத்துச் சென்றனர், அதனை கிரேக்கக் கப்பலுக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். பித்ருகீர்த்தி இறந்தது கண்டு வஜ்ஜிரகாயன் கண்ணீர் வடித்தான். அவனது தாய் அப்போதைக்கு அப்போதே ஒரு கவசம் தயாரித்து வஜ்ஜிரகாயனிடம் கொடுத்தாள்,

வஜ்ஜிரகாயனும் அதை அணிந்து கொண்டு போய் ராஜராஜனைக் கண்டான். அவனது மனஸ்தாபம் மறைந்தது, இருவரும் சமாதானமாகப் போனார்கள். அதன்பின் வஜ்ஜிர காயன் பித்ரு கீர்த்தியைக் கொன்றதற்காகப் பழி வாங்குவதாகக் கூறிப் போர்க்களத்திற்குச் சென்றான்.

வஜ்ஜிரகாயன் போர்க்களத்திற்கு வந்தது கிரேக்கர்களுக்குப் புதிய உற்சாகத்தை மூட்டியது. அவர்கள் ட்ரோஜன்களைக் கடுமையாகத் தாக்கலானார்கள். ட்ரோஜன்களோ அத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திணறினார்கள்.

வஜ்ஜிரகாயன் போர்க்களத்தில் ட்ரோஜன்களைக் கதறக் கதற அடிக்கலானான். அவர்கள் போர்க்களத்தை விட்டு ஓடவே, வஜ்ஜிரகாயன் அவர்களை ஸ்கமந்தர் நதி வரை துரத்தி சென்றான். அங்கு ட்ரோஜன்களை இருபிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவையும் பலமாகத் தாக்கினான். ட்ரோஜன்கள் தப்பி எப்படியோ ட்ராய் நகருக்குள் சென்றார்கள்.

கிரேக்கப் படைத் தலைவர்களில் சிறந்தவன் வஜ்ஜிரகாயன். ட்ரோஜன்களின் தலை சிறந்த வீரன் வீரசிம்மன். ஆனால் அதுவரை அவர்கள் இருவருமே போர்க்களத்தில் சந்தித்ததே இல்லை. இப்போது அவர்களிடையே போர் மூண்டது. அதைக் காண இருதரப்பினரும் நின்றார்கள்.

முதலில் வீரசிம்மன் வஜ்ஜிரகாயனின் தாக்குதலைக் கடுமையாகத் தாக்காமல் இருந்தான். வஜ்ஜிரகாயனோ தன் தாக்குதலை நிறுத்தவில்லை. ஆனால் அவன் களைத்துப் போகலானான். இப்படி நடக்கும் என எதிர்பார்த்து வீரசிம்மன் தன் தாக்குதலைக் கடுமையாக்கினான். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி வஜ்ஜிரகாயன் மிகவும் களைத்துப் போய் விடவில்லை.




வீரசிம்மன் வஜ்ஜிரகாயனை ட்ராய் கோட்டையை மூன்று தடவை சுற்ற வைத்தும் வஜ்ஜிரகாயன் களைத்துப் போய் விடவில்லை. முடிவில் வீரசிம்மன் ஓரிடத்தில் நின்று வஜ்ஜிரகாயனை எதிர்க்கலானான். வஜ்ஜிரகாயனின் தாக்குதலால் குற்றுயிராய்

விழுந்த வீரசிம்மன் தான் இறந்தபின் தன் உடலைத் தன் குடும்பத்தவரிடம் ஒப்படைத்து விடும்படி அவனிடம் வேண்டிக் கொண்டான்.

ஆனால் வஜ்ஜிரகாயன் வீரசிம்ம னின் கடைசி வேண்டுகோளின்படி நடக்கவில்லை. அவன் வீரசிம்மனின் உடலிலிருந்து அவன் கவசத்தைக் கழற்றி எடுத்துக் கொண்டான். வீர சிம்மனின் கால்களைக் கட்டித் தன் தேரோடு பிணைத்து புழுதியில் புரள இழுத்துக் கொண்டு போகும்படி தேரை ஓட்டினான்.

பித்ரு கீர்த்தியின் நினைவாகப் பல போட்டிகள் நடந்தன. தேர்ப் போட்டியில் தேவமயன் முத லாவதாக வந்தான். மற்போரில் ரூபதரனும் பூதவனும் சமமாக வந் தனர்.

வஜ்ஜிரகாயனின் பழிவாங்கும் மனப்பான்மை மறையவில்லை. அவன் தினமும் வீரசிம்மனின் உடலை இழுத்துப் போய் பித்ரு கீர்த்தியின் சமாதியை மூன்று முறை சுற்றி வந்தான். தம் மகன் வீரசிம் மனின் உடலைக் கொடுக்காததோடு அதனை இழுத்து இழிவுபடுத்துவது கண்டு ட்ராய் மன்னன் மனம் புழுங் கினான்.

ஒருநாளிரவு ட்ராய் மன்னன் வர்த்தனன் கிரேக்க முகாமிற்கு வந்து தன் மகனின் உடலை வாங்க வஜ்ஜிர காயனின் கூடாரத்திற்குச் சென்றான். அப்போது வஜ்ஜிரகாயன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். வர்த்த னன் நினைத்திருந்தால் அவனைக்



கொன்றிருக்கலாம். ஆனால் அவனது தயாள குணம் அவனை அவ்வாறு செய்யவிடவில்லை.

வஜ்ஜிரகாயன் தூங்கி எழுந்ததும் வர்த்தனனைக் கண்டு பேசினான். வீரசிம்மனின் உடல் நிறைக்குச் சமமான தங்கம் கொடுத்து அவ்வுடலை எடுத்துப் போக உடன்பாடு ஏற்பட்டது. ஒரு தராசு ட்ராய் நகர வாசலில் வைத்து ஒரு தட்டில் வீரசிம்மனின் உடலை வைத்து மற்ற தட்டில் தங்கத்தை வைக்கலானார்கள். பொக்கிஷத்திலிருந்த தங்கம் எல்லாம் கொண்டு வரப்பட்டு தட்டில் வைக்கப்பட்டது. எவ்வளவு தங்கத்தை வைத்தும் தட்டுகள் சமநிலைக்கு வரவில்லை.

வர்த்தனனின் பொக்கிஷத்திலிருந்த தங்கம் எல்லாம் வந்து விட்டது. இரு தட்டுகளும் சமநிலைக்கு வராததால் வர்த்தனனின் மகள் பிரமோதினி தன் கை வளையல்களைக் கழற்றி தங்கம் வைக்கப்பட்ட தட்டில் வைத்தாள். அப்போதுதான் இரு தட்டுகளும் சமநிலைக்கு வந்தன.

அப்போது வஜ்ஜிரகாயன் "எனக்கு உங்கள் தங்கமே வேண்டாம். அதற்கு பதிலாக உங்கள் மகள் பிரமோதினியை எனக்கு மணம் செய்து வையுங்கள். புவனசுந்தரியை பிரதாபனிடம் ஒப்படையுங்கள். நாம் போரை நிறுத்தி விடலாம்" என்றான்.

வர்த்தனனோ "பிரமோதினியை வேண்டுமானால் நீ மணந்து கொள். ஆனால் புவனசுந்தரியை மட்டும் ஒப்படைக்க முடியாது" என்றான்.





அவனது உயிர்நிலையைத் தெரிந்து கொண்டாள். அது அவனது வலது கால் மடிப்பில் உள்ளதென அவள் தெரிந்து கொண்டு விட்டாள்.

அவள் வஜ்ஜிரகாயனுக்கு "நீ வெறுங் காலுடன் சூரியதேவனின் ஆலயத்திற்கு எவ்வித ஆயுதமும் எடுத்து வராமல் தன்னந்தனியாக வந்தால் நாம் அத்தேவனுக்கு பலி கொடுத்து நம் விவாகம் நடப்பதை உறுதி செய்து கொள்வோம்" என்று செய்தி அனுப்பினாள்.

வஜ்ஜிரகாயன் அவ்விதமாகவே அந்த ஆலயத்திற்கு வந்தான். அங்கு பிரமோதினியுடன் சில உறவினர்கள் இருந்தனர். அவளுடைய அண்ணன் அரிபயங்கரன் கூட வஜ்ஜிரகாயன் மீது மிகுந்த அன்பு கொண்டவன் போல நடித்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டான். அதே சமயம் மோகன் விக்கிரகத்தின் பின் மறைந்திருந்து வஜ்ஜிரகாயனின் வலது கால் மடிப்பிற்குக் குறி வைத்து அம்பை எய்தான். அது விஷம் தோய்ந்த அம்பு. அப்படியும் வஜ்ஜிரகாயன் உடனே சாகவில்லை. அவன் அங்கு எரிந்து கொண்டிருந்த இரு கொள்ளிக் கட்டைகளை எடுத்து ட்ரோஜன்களைத் தாக்கினான். அதில் பல ட்ரோஜன்கள் இறந்து போயினர்.

கிரேக்கப் படையில் ரூபதரனும் பூதவனும் வஜ்ஜிரகாயன் ஏதோ சதி செய்வதாக எண்ணினார்கள். அவன் பிரமோதினியை மணந்து கொண்டு

அதுபற்றி யோசிப்பதாக வஜ்ஜிரகாயன் கூறவே வர்த்தனன் வீரசிம்மனின் உடலை எடுத்துப் போய் முறைப்படி ஈமச் சடங்குகளை செய்தான்.

வஜ்ஜிரகாயனின் முயற்சி அவனுக்கே ஆபத்தாகியது. எப்படியும் போர் நிற்கத்தான் போகிறது என்றே பிரமோதினி வஜ்ஜிரகாயனை மணக்க சம்மதித்தாள். அதற்கு முக்கிய காரணம் வஜ்ஜிரகாயனைப் பழி வாங்கவே வேண்டும் என்பதே. ஏனெனில் தன் அண்ணன் இலியனை வஜ்ஜிரகாயன் குரூரமாகக் கொன்றான் என்று பொருமினாள்.

பிரமோதினி வஜ்ஜிரகாயன் மீது ஆசை கொண்டவள் போல நடித்து

போரை நிறுத்த வாக்களித்தது பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. அவன் சூரியதேவனின் ஆலயத்திற்கு போனது தெரிந்து அங்கு என்ன சதி நடக்கிறது எனக் காண அவர்களும் அந்த ஆலயத்திற்குச் சென்றார்கள்.

அவர்கள் ஆலய வாசலை அடைந்த போது அரிபயங்கரனும் மோகனும் அங்கிருந்து போவதைக் கண்டார்கள். அவர்கள் ஆலயத்திற்குள் போய் குற்றுயிராய் உள்ள வஜ்ஜிரகாயனைக் கண்டார்கள். அவன் அவர்களிடம் "என்னை வஞ்சகமாகக் கொன்று விட்டார்கள். இதற்குக் காரணம் அந்தப் பிரமோதினியே. ட்ராய் நகரை அழித்து அங்கு என் சமாதியைக் கட்டி என் சமாதி முன் பிரமோதினியை பலி கொடுங்கள். இதுவே என் கடைசி விருப்பம்" எனக்கூறி உயிரை விட்டான்.

பூதவன் வஜ்ஜிரகாயனின் உடலைத் தன் தோளின் மீது போட்டுக் கொண்டு கிளம்பினான். வஜ்ஜிரகாயனின் உடலை கிரேக்கர்களிடமிருந்து பறிக்க ட்ரோஜன்கள் முயற்சி செய்தனர். ஆனால் கிரேக்கர்கள் அவர்களை விரட்டி உடலைத் தம் கப்பலுக்கு எடுத்துச் சென்றனர்.

வஜ்ஜிரகாயனின் தாய் தமனியின் துயரத்தை எப்படிக் கூறுவது? அவளும் கிரேக்க வீரர்களும் பதினாறு நாட்கள் சாப்பிடாமல் இருந்தனர். வஜ்ஜிரகாயனின் அஸ்தியையும் பித்ருகீர்த்தியின் அஸ்தியையும் ட்ராய் கடற்கரையில் வைத்து அங்கு சமாதி கட்டினார்கள். அங்கு கற்களை உயரமாகக் குவித்து அதனருகே இருந்த கிராமத்திற்கு வஜ்ஜிரகாயனின் பெயரையும் சூட்டினார்கள்.

அங்கு வஜ்ஜிரகாயனுக்கு ஒரு ஆலயமும் கட்டப்பட்டது. அதில் அவனது உருவச் சிலையை நிறுவினார்கள். அதற்கு ஸ்திரீகள் அணியும் தோடு போடப்பட்டது. இன்றும் அந்தச் சிலை இருப்பதைக் காணலாம்.



# நகை விற்கிறான்!

லட்சுமணன் தன் மகளின் விவாகத்தை நடத்தினான். அப்போது வெளியூர் போயிருந்த அருணாசலம் ஊர் திரும்பி வந்ததும் லட்சுமணனைப் பார்தது "உன் மகளின் கல்யாணத்திற்கு நான் வரமுடியவில்லை. எல்லாம் நல்லபடியாக நடந்ததா? மாப்பிள்ளை என்ன செய்கிறார்?" என்று கேட்டான்.

லட்சுமணனும் "எல்லாம் நல்லபடியாக நடந்தது. மாப்பிள்ளை நகைகளை விற்று வருகிறார்" என்றான். அதுகேட்டு அருணாசலம் "ஓ! நகை வியாபாரமா செய்கிறார். பேஷ். பேஷ். நல்ல தொழில்தான்" என்றான்.

மறுநாள் அருணாசலம் வட்டிக்கடை வைரவன் கடைக்குப் போனான். அங்கே லட்சுமணனின் மாப்பிள்ளை வைரவனுக்கு ஒரு நகையை விற்றுக் கொண்டிருப்பதைக் கண்டான். அவன் போனபின் வைரவன் "இவன் இப்படித்தான் தினமும் ஒரு நகையாக என்னிடம் விற்கிறான். எல்லாம் இவன் மனைவிக்கு இவன் மாமனார் போட்ட நகை" என்றான்.

"இதுவா நகை வியாபாரம்!" என்று எண்ணித் திகைத்தான் அருணாசலம்.






# மாதங்கியின் முடிவு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த நள்ளிரவில் இப்படி விடா முயற்சியாக இச் செயலில் ஈடுபட்டிருக்கிறாயே. இதன் பலன் கிட்டினால் அதைக் கொண்டு திருப்தி அடைந்து விடுவாயா? அல்லது மாயாபுரி இளவரசி மாதங்கி மாதிரி கிடைத்ததை நழுவவிட்டு விடுவாயா? சில வேலைகளைச் செய்ய விடாமுயற்சியும் முழு ஈடுபாடும் தேவையே. ஆனால் அதனால் கிடைக்கும் பலனை அனுபவிக்க அறிவும் அனுபவமும் தேவை. அப்படி இல்லாதவள் போலத் தென்பட்ட மாயாபுரி இளவரசி மாதங்கியின் கதையைக் கூறுகிறேன். கவன

## வேதாளம் சொல்லும் கதை



மாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஒருமுறை கிழக்குக் கடற்கரையை ஒட்டிய பகுதியில் புயல் அடித்து அடர் மழை பெய்தது. அப்போது ஒரு மலைச்சாரலிலிருந்து ஒரு சிவன் கோவில் திடீரென வெளிப்பட்டது. அது மிகப் பழங்காலத்தது. இது பற்றி யாவரும் பேசவே அத் தகவல் மாயாபுரி மன்னன் மகாசேனனுக்கு எட்டியது.

மகாசேனனின் மகள் மாதங்கி. அவள் சிவபெருமானிடம் பக்தி கொண்டவள். அவள் தன் தந்தையிடம் "தந்தையே! இந்த சிவன் கோவில் நம் தலைநகருக்கு மிக அருகில் இருப்பது அதிர்ஷ்டமே. என் மேற்பார்வையில் அதைப் பழுது பார்த்துப் புதுப்பிக்கிறேன்" என்று மிகவும் உற்சாகத்துடன் கூறினாள்.

மகாசேனனும் "அப்படியே செய்" எனத் தன் மகளுக்கு அனுமதி அளித்தான். நல்ல முகூர்த்த வேளையில் ஆலயத்தைச் செப்பனிடும் பணி ஆரம்பமாகியது. மாதங்கி பகல் முழுவதும் அந்த ஆலயத்தில் இருந்து நடக்கும் வேலைகளை மேற்பார்வை பார்த்து வரலானாள்.

ஒருநாள் உச்சி வேளையில் அவள் உணவு அருந்திவிட்டு இளைப்பாறிக் கொண்டிருந்தாள். அப்போது எங்கிருந்தோ இனிய புல்லாங்குழலின் இசை அவளுக்குக் கேட்டது. அவள் எழுந்து அந்த இசை எங்கிருந்து ஒலிக்கிறது எனக் காணக் கிளம்பிச் சென்றாள். ஓரிடத்தில் பசும்புல் மைதானத்தில் சில ஆடுகள் புல் மேய்ந்து கொண்டிருப்பதையும் சற்று தூரத்தில் ஒரு மரத்தின் கீழ் இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க இளைஞன் ஒருவன் கண்ணை மூடிக் கொண்டு தன்னையே மறந்து குழல் இசைத்துக் கொண்டிருப்பதையும் அவள் கண்டாள்.

அவளும் அந்த இசையில் மயங்கி நின்றாள். அவ்வாலிபன் தன் வாசிப்பை நிறுத்திய பின் பார்த்த போது எதிரே மாதங்கி நிற்பது கண்டு திகைத்துப் போனான். அவள் புன்னகை புரிந்தவாறே "நான் அரசகுமாரி மாதங்கி. உன் குழலிசை

மிக நன்றாக உள்ளது. உன் பெயர் என்ன?" என்று கேட்டாள்.

அவனும் "என் பெயர் "கோபாலன்" எனக் கூறி அவளை வணங்கி விட்டுத் தன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு சென்றான். அன்று முதல் மாதங்கி கோபாலனைச் சந்திக்க யாருக்கும் தெரியாமல் வரலானாள். அவன் அவளைப் பல பாடல்களை இசைக்கச் சொல்லியதோடு குழல் ஊதி இசைப்பதையும் அவனிட மிருந்து கற்கலானாள். அவளும் அவ னுக்கு நற்பண்புகளைக் கற்பித்தாள்.

ஒருநாள் மாதங்கி குழல் இசைத் துக் கொண்டிருக்கையில் விடாமல் இருமல் வரவே கோபாலன் "இங்கு சற்று தூரத்தில் ஒரு கிழவி இருக் கிறாள். அவளுக்கு வைத்தியம் நன்கு தெரியும். அவளிருக்கும் இடத்தில் தென்னை மரங்களும் உள்ளன. அங்கே உங்களை அழைத்துப் போகி றேன்" எனக் கூறி மாதங்கியை அக் கிழவியின் குடிசைக்கு அழைத்துச் சென்றான்.

அடர்ந்து வளர்ந்த மரங்களினி டையே அக்கிழவியின் குடிசை இருந் தது. யாரோ வரும் காலடி சத்தம் கேட்டுக் கிழவி குடிசையிலிருந்து வெளியே வந்தாள். அவள் மாதங்கி யைப் பார்த்து "யாரம்மா நீ? என் னைத் தேடிக் கொண்டு இங்கு வந்த காரணம் என்ன?" என்று பரிவுடன் கேட்டாள்.

அப்போது கோபாலன் அவளை



அழைத்து வந்த காரணத்தைக் கூறி னான். கிழவியும் குடிசைக்குள் போய் தண்ணீர் எடுத்துவந்து அவளுக்குக் கொடுத்தாள். மாதங்கியும் அதைக் குடித்துவிட்டு "ஆஹா! இந்தக் குடி யைச் சுற்றிலும் எவ்வளவு மலர்ச் செடிகள் உள்ளன. அவற்றின் மலர் களின் நறுமணம் என் மனதை மிக வும் கவர்கிறது" என்றாள்.

"இது பவளமல்லி வாசனை" எனக் கூறி கிழவி உதிர்ந்த கீழே விழுந்திருந்த மலர்களை எடுத்து அவளிடம் கொடுத்தாள். அவள் அதைக் கட்டித்தன் தலையில் வைத் துக் கொண்டாள். கிழவி தண்ணீரில் கலந்து கொடுத்த மருந்தால் மாதங்கி யின் இருமல் நின்றுவிட்டது.



அதன் பிறகு கோபாலன் மாதங்கியை அழைத்துக் கொண்டு ஆலயத்தருகே கொண்டு போய் விட்டான். மாதங்கி அப்போதே தன் மனதில் மணந்தால் கோபாலனையே மணப்பது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

அன்றிரவு அவளது அறைக்கு மகாசேனன் வந்து "மாதங்கி! உதயகிரி இளவரசன் உதயசேனன் உன்னை மணக்க விரும்புகிறான். அவன் ஏற்றவனா அல்லது இல்லையா என்று காண வேண்டாமா? எனவே அவனை நம் விருந்தினனாக வந்து இருக்குமபடி அழைத்திருக்கிறேன். அவன் நாளை மாலை இங்கு வருகிறான். நம் அரண்மனையில் இரண்டு நாட்கள் தங்கி இருப்பான்" என்றான்.

அப்போது கோபாலனைப் பற்றித் தன் தந்தையிடம் கூற அவளுக்குத் துணிச்சல் வரவில்லை. மறுநாள் அவள் கோபாலனைச் சந்தித்தபோது தன் தந்தை கூறியதைச் சொல்லி "அந்த இளவரசனுக்கு என்னைப் பிடித்துப் போய்விடும். என் தந்தை அவசரப்பட்டு வாக்குப் கொடுத்து விட்டால் அதை நான் மீறி முடியாதே. அவனை மணக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுவேனே" என்றாள்.

கோபாலனும் "நாம் கிழவியிடம் போய் யோசனை கேட்போம்" எனக் கூறி அவளை அழைத்துக் கொண்டு கிழவியின் குடிசைக்குச் சென்றான். மாதங்கியும் கிழவியிடம் நடந்ததைக் கூறி "என் தந்தை என் விருப்பத்திற்கு மாறாக நடக்கமாட்டார். என் தந்தை கோபாலனை மிகவும் விரும்புவார் என்றே நினைக்கிறேன். ஆனால் கோபாலனை என் தந்தையிடம் அழைத்துச் செல்ல எனக்குத் தைரியம் வரவில்லை" என்றாள்.

கிழவியும் சிறிது நேரம் யோசித்து விட்டு ."இதுபற்றிக் கவலைப்பட எதுவும் இல்லை. கோபாலன் இளவரசன் உதயசேனனாகப் போய் உன் தந்தையைக் காண்பான். நீதான் கோபாலனைக் கண்டாலும் உன் தந்தை மிகவும் விரும்புவார் என்று கூறினாயே. அதனால் எல்லாம்

நல்லவிதமாகவே முடியும்" என்று கூறினாள்.

உதயகிரி இளவரசன் மாயாபுரிக்கு வரவேண்டும் என்றால் வருவதற்கு உள்ள வழி மலை வழியாக உள்ளது ஒன்றுதான். அதுவும் அக்கிழவியின் குடிசைமுன் தான் செல்வது. உதய சேனன் அங்கு வரும் போது கோபா லன் என்ன செய்ய வேண்டும் என் பதைக் கிழவி அவனுக்குச் சொன் னாள்.

மாலையாகும் போது உதய சேனன் ஒரு குதிரை மீதமர்ந்து அக் குடிசையருகே வந்து கொண்டிருந் தான். கிழவி அவன் முன்போய் "நாகப்பா! வா. இறங்கி சாப்பிட்டு விட்டுப் போ" என்றாள். அது கேட்டு உதயசேனன் ஆச்சரியப்பட்டு "பாட்டி! நீ நினைப்பது போல நான் நாகப்பன் அல்ல. என்னைச் சரியாக நீ தெரிந்து கொள்ளவில்லை. நான் உதயகிரி இளவரசன் உதயசேனன்" என்று கூறியவாறே குதிரை மீதிருந்து கீழே இறங்கி வந்தான்.

அங்கே இருந்த கோபாலன் அவ னைத் தனியே அழைத்துப்போய் "ஐயா! இந்தக் கிழவியின் ஒரே பேரன் நாகப்பன். அவன் மன்ன னின் படை வீரனாக இருந்தவன். பல ஆண்டுகளுக்கு முன் அண்டை நாடு இந்நாட்டின் மீது போர் தொடுத்தபோது நாகப்பன் கிழவியின் பேச்சைக் கேளாமல் போர்புரியச் சென்றான். அதில் அவன் வீரமர ணம் அடைந்தான். அது முதல் கிழவியின் மூளை சரி இல்லை. உங்





களைக் கண்டு நாகப்பனின் சாயலில் நீங்கள் இருப்பதாக அவள் எண்ணி விட்டாள் போலிருக்கிறது. நீங்கள் இன்று இவள் அளிக்கும் உணவை உண்டுவிட்டுச் செல்லுங்கள் அதனால் அவள் மனம் திருப்தி அடையும்" என்றான்.

அதைக் கேட்ட உதயசேனனின் மனம் இளகிவிட்டது. அவன் கிழவியினருகே போய் "பாட்டி! எனக்கு ஒரே பசியாக இருக்கிறது சாப்பாடு போடுகிறாயா?" என்று கேட்டான். கிழவியும் அவனுக்கு உடனே உணவு பரிமாறினாள். உதயசேனன் மனமில்லாமல்தான் அதைச் சாப்பிட்டான். அதன்பின் சற்று இளைப்பாறப் படுத்தான். அவ்வளவுதான் அவன் தன் நினைவையே இழந்து விட்டான்.

அப்போது கோபாலனிடம் கிழவி "கோபாலா! சட்டென இவன் உடைகளைக் கழற்றி நீ அணிந்து கொண்டு குதிரை மீதமர்ந்து தலைநகருக்கு உதயசேனனாகப் போ. இந்த இளவரசன் நாளை மாலை வரை எழுந்திருக்கமாட்டான்" என்றாள். கோபாலனும் உதயசேனனின் ஆடைகளை அணிந்து குதிரை மீதமர்ந்து அரண்மனைக்குச் சென்றான்.

அரசகுமாரன் போலிருந்த கோபாலனை மகாசேனன் கண்டு அவனை உதயசேனன் என்று நினைத்து விட்டான். அவன் தன் மகளிடம் "ஆகா! நீ தான் எவ்வளவு அதிர்ஷ்டசாலி. உனக்குக் கணவனாகப் போகிறவன் எவ்வளவு அழகாக இருக்கிறான்" என்று கூறி மகிழ்ந்தான்.

மாதங்கி ஒரேடியாக மகிழ்ந்து போனாள். மறுநாள் நதியில் படகில் மாதங்கியும் கோபாலனும் சென்றுவர மகாசேனன் ஏற்பாடு செய்தான். மாதங்கி அதற்காகக் கிளம்பும் போது ஒரு பணிப் பெண் வந்து "இளவரசி! உங்களைக் காண யாரோ ஒரு கிழவி வந்திருக்கிறாள். அவள் கையில் பவளமல்லி மாலை உள்ளது. அதை அவளே உங்களிடம் கொடுக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். அவளை உள்ளே அனுப்பட்டுமா?" என்றாள்.

பவளமல்லி என்றதுமே மாதங்

கிக்குக் காட்டிலுள்ள கிழவியைப் பற்றிய நினைவே வந்தது. அவள் உடனே கிழவியை உள்ளே அனுப்பும்படிக் கூறினாள். கிழவி உள்ளே வந்து "பாவம்! அந்த அரசகுமாரனுக்கு ஒரே காய்ச்சல். என்ன மருந்தைக் கொடுத்தும் அவனுக்குத் தன் நினைவே வரவில்லை. நீ அரசாங்க வைத்தியரை அழைத்துக் கொண்டு உடனே வா" என்றாள்.

மாதங்கி கிழவியை அனுப்பிவிட்டு பூங்காவில் காத்து நின்ற கோபாலனிடம் போய்க் கிழவி கூறியதைச் சொன்னாள். பிறகு "இப்போது படகில் உல்லாசப் பயணத்திற்கு நான் வரவில்லை. இப்போதே வைத்தியருடன் நான் அந்தக் கிழவியின் குடிசைக்குப் போகப் போகிறேன்" என்று கூறிக் கிளம்பி விட்டாள்.

அப்போது கோபாலன் "நீ அவனுக்காக இரக்கப்பட்டு பேசுவது சரியல்ல. உனக்கு என் மீதுள்ள பிரியம் குறையவில்லையே. அங்கே போகாமல் என்னுடன் வா" என்றான். மாதங்கி அவனுக்கு பதில் எதுவும் கூறாமல் அங்கிருந்து போய் ராஜ வைத்தியரை அழைத்துக் கொண்டு கிழவியின் குடிசைக்குச் சென்றாள்.

வைத்தியர் நினைவிழந்து கிடக்கும் உதயசேனனின் நெற்றியில் ஒரு தைலத்தைத் தடவினார். பிறகு அவர் "இன்னும் இரண்டும் மணி நேரத்தில் இவனுக்கு நினைவு வந்துவிடும்




அதற்குப்பின் இந்த இரண்டு மாத்திரைகளைக் கொடுத்தால் பூரண குணம் அடைந்துவிடுவான்" எனக் கூறி மாத்திரைகளை மாதங்கியிடம் கொடுத்தார். அவர் உதயசேனனைப் பற்றிய முழு விவரம் தெரிந்து கொண்டு அரண்மனைக்குப் போய் உண்மை என்ன என்று மன்னனிடம் கூறிவிட்டார்.

உடனே மன்னன் தன் பரிவாரங்களோடு வைத்தியரையும் அழைத்துக் கொண்டு கிழவியின் குடிசைக்குச் சென்றான். அப்போது உதயசேனனுக்கு மெதுவாக உணர்வு வந்து கொண்டிருந்தது. அவன் ஏதோ சொல்லிக் கொண்டிருக்க, மாதங்கியின் கண்களில் நீர் நிறைந்தது.

அவள் தன் தந்தையைத் தனியே அழைத்துப் போய் நடந்ததை விவரமாகக் கூறி "என் தூண்டுதலின் பேரில் கோபாலன் உதயசேனனைப் போல வேடம் பூண்டு அரண்மனைக்கு வந்தான். திடீரென இந்த உதயசேனன் இங்கு நோய்வாய்ப் பட்டான்" என்றாள். அதுகேட்டு மகாசேனன் தன் மகளிடம் "நீ அவசரப்பட்டு செய்த செயலுக்கு உதயசேனனிடம் மன்னிப்புக் கேள் நீ வேண்டுமானால் கோபாலனையே மணந்து கொள்ளலாம்" என்றாள்.

மாதங்கியோ "இல்லை அப்பா! நான் இந்த உதயசேனனைத்தான் மணக்கப் போகிறேன். நடந்ததற்கு அவரிடம் மன்னிப்பும் கேட்கிறேன்" என்றாள்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! மாதங்கி கோபாலனைத் தானே மிகவும் விரும்பினாள்? அவளது தந்தை கோபாலனை அவள் மணக்கலாம் என்று கூறியும் அவள் அதற்கு ஒப்பாமல் ஏன் உதயசேனனையே மணப்பதாகத் தீர்மானித்தாள்? இதற்கு பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "கோபாலனுக்குத் தானாக சிந்திக்கும் சக்தி கிடையாது. அதுமட்டுமல்ல, சுயநலம் கொண்டவன். உதயசேனனோ கிழவியைத் திருப்திப்படுத்தித் தன் பயணத்தை மத்தியில் நிறுத்தினான். மாதங்கியை மணப்பவன் நாட்டின் அரசனாக வேண்டியவன். பிறர் மனம் மகிழவும், சுயநலம் கொள்ளாமலும் இருப்பவனே நாட்டின் அரசனாகத் தகுதிப் பெற்றவன். இத்தகைய தகுதி உதயசேனனிடம் இருந்தது. கோபாலனிடம் இல்லை. எனவே உதயசேனனையே மணக்கத் தீர்மானித்தாள்" என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# நம் நாட்டுக் கோட்டைகள்-2

டில்லியில் உள்ள கோட்டைகளின் எண்ணிக்கை மிக அதிகம். நம் நாட்டில் வேறு எந்த நகரிலும் இவ்வளவு கோட்டைகள் இல்லை. பாண்டவர்களின் தலைநகரான இந்திரப்பிரஸ்தம் இதுதான் என்கிறார்கள். ஆனால் இதை நிரூபிக்க தக்க ஆதாரங்கள் இல்லை. ஆனால் இப்போது குதுப்மீனார் உள்ளப் பகுதியில் அனங்கபாலன் என்ற தோமர மன்னன் கி.பி. 737ல் லால் கோட்டையை நிர்மாணித்தான் என்று ஆதாரபூர்வமாகக் கூற முடியும். இதற்கு நானூறு ஆண்டுகளுக்குப்பின் இதே இடத்தில் பிருத்விராஜ் சௌஹான் இன்னொரு கோட்டையைக் கட்டினான். பிருத்விராஜை ராய் பிதோரா என்றும் அழைக்கிறார்கள். எனவே இக்கோட்டையும் கட்ராய் பிதோராவாகப் பெயர் அடைந்தது.



## லால் கோட்டையிலிருந்து லால்கிலா வரை

எழுதியவர்: மீரா உக்ரா
படங்கள்: கௌதம் சென்

கி.பி. 1303ல் அல்லாவுத்தீன் கில்ஜி, கோலக்-ஏ-சிரி என்ற சிரிக்கோட்டையை நிர்மாணித்தான். 1982ல் இது ஆசிய விளையாட்டு இடமாகிறது. கில்ஜி வம்சத்திற்குப் பின் துக்ளக் வம்சம் ஆட்சி புரிந்தது. மங்கோலியர் படையெடுப்பிலிருந்து காக்க கியாசுத்தீன், மகம்மது, பிரோஜ் ஷா என்று மூன்று துக்ளக் வம்ச மன்னர்கள் தனித்தனியாகக் கோட்டைகளைக் கட்டினார்கள். அவை துக்ளகாபாத், ஆதிலாபாத் (ஜஹாம்பனாஹா) பிரோஜ் ஷா கோட்லா என்ற மூன்று கோட்டைகள். இன்று அவற்றின் உயரமான சுவர்களே அவற்றை நினைவூட்டுபவையாக உள்ளன.

◀ துக்ளகாபாத்

இன்று புரானா கிலாவென வழங்கப்படும் கோட்டையைக்கட்ட இரண்டாவது முகலாயச் சக்கரவர்த்தி ஹுமாயுன் ஆரம்பித்தார். இதைக் கட்டி முடித்தவர் ஷேர்ஷாசூரி. முகலாய சக்ரவர்த்தி அக்பர் தன் தலை நகரை ஆக்ராவுக்கு மாற்றினார். அவர் பாதல்கட் என்ற கோட்டையைக்கட்டி அதை வலுப்படுத்தினார். சிவப்பு மண்ணால் சுடப்பட்ட கற்களைக் கொண்டு கட்டப்பட்டதால் அதற்கு லால்கிலா (சிவப்புக் கோட்டை) என்ற பெயர் ஏற்பட்டது. அழகானதும் மிகவும் உறுதியானதுமான



▲ புரானா கிலா

லால்கிலா, ஆக்ரா.

இக்கோட்டைக்கு இரண்டு அகழிகளும் இரு சுற்று மதில் சுவர்களும் உள்ளன

◀ லால்கிலா கட்டப்படுகிறது. அக்பர்நாமாவிலுள்ள படம்.

அக்பரின் பேரனான ஷாஜஹானின் தர்பாரிலிருந்த அமர்சிங் ராதோட் என்ற ரஜபுத்திர படைத் தலைவன் இந்தக் கோட்டையிலிருந்து துணிகரமாகத் தப்பிச் சென்றான் என்பதற்கு ஆதாரம் உள்ளது. தன்மீது எப்போதும் குற்றம் சாட்டிய சலாவத்கான் என்ற பொக்கிஷ அதிகாரியை அவன் ஆத்திரம் கொண்டு கொன்றுவிட்டான். ஷாஜஹானின் வீரர்கள் துரத்திவரவே அவன் குதிரை மீதேறித் தப்பி ஓட முயன்றான். ஆனால் கோட்டை வாசல் கதவு மூடி இருக்கவே குதிரையை மதில் சுவர் மீதுப் போகப் பயன்படும் படிகள் வழியாக ஓட்டி மதில் மீதிருந்து முப்பது அடிபள்ளத்தி லுள்ள தரை மீது குதிக்க வைத்துத் தப்பி ஓடிவிட்டான். இதுவரை அக் கோட்டை வாசலுக்கு இருந்த 'அக்பர் தர்வாஜா' என்ற பெயர் மாறி 'அமர்சிங் தர்வாஜா' என்றாகிவிட்டது.



◀ *அமர்சிங் தர்வாஜா*

▼ *திவான்-ஏ-காஸ், லால் கிலா, டில்லி*



ஷாஜஹான் தலைநகரை மீண்டும் டில்லிக்கு மாற்றினான். ஷாஜஹானாபாதில் 1639 மே 12ல் ஒரு கோட்டையைக் கட்ட ஆரம்பித்தான். ஆக்ரா கோட்டை போல இதுவும் சிவப்பு மண்ணால் கற்களைச் சுட்டுக் கட்டப்பட்டதால் இதற்கு லால் கிலா (செங்கோட்டை) என்ற பெயர் வந்தது. 1648 ஏப்ரல் 18ல் ஷாஜஹான் இங்கு முதன் முதலாக மிக விமரிசையாக தர்பார் நடத்தினான்.

இங்கு மயிலாசனம் தங்க, வெள்ளி, பட்டு வேலைப்பாடுகளோடு செய்யப்பட்டு காண்போர் கண்ணைப் பறிப்பதாய் இருந்தது. 'உலகில் சொர்க்கம் என்பது இருந்தால் அது இங்குதான்! இங்குதான்' என்ற பிர்தூசியின் பாடலை ஷாஜஹானின் மூத்த மகனான தாரா கிஷோக் இங்கு பொறித்து வைத்தான். மயிலாசனத்திலும் இதைத் தங்க எழுத்துக்களில் பொறித்தான். ஔரங்கஜேபிற்குப் பின் வந்த முகலாய மன்னர்களுக்கு இந்த சொர்க்கம் நரகமாகத் தான் இருந்தது. முகலாய சாம்ராஜ்யம் வீழ்ச்சி அடையவே கோட்டை நாதிர்ஷா, அகம்மதுஷா அப்தலி முதலியவர்களின் வசமாகியது. 1957-58ல் சிப்பாய்கள் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு எதிராகப் போராட்டம் நடத்தினார்கள். அவர்கள் முகலாய வம்சத்தின் கடைசி



◀பகாதுர் ஷா ஜாபர்

மன்னனான பகாதுர்ஷா ஜாபரைத் தம் மன்னனாக்கி கொண்டார்கள். அதனால் பலத்த மோதல் ஏற்பட்டு ரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது. பகாதுர்ஷா ஜாபர் பிடிபட்டு ஆங்கிலேயர் விசாரணைக்கு ஆளானான். அவன் குற்றவாளி எனத் தீர்மானிக்கப்பட்டு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு பர்மாவுக்கு அனுப்பப்பட்டான்.

1947 ஆகஸ்ட் 15ல் நம் நாடு விடுதலை பெற்றது. அன்று பிரிட்டிஷ் யூனியன்க் கொடி லால் கிலாவிலிருந்து கீழே இறக்கப்பட்டு அதன் இடத்தில நம் நாட்டின் மூவர்ணக் கொடி பண்டித ஜவாஹர்லால் நேருவால் ஏற்றப்பட்டது. லால் கோட்டிலிருந்து லால் கிலா வரையிலான வரலாற்றின் ஒரு அத்தியாயம் முடிவுற்றது.



◀லால் கிலா (செங்கோட்டை) டில்லி.



# அனுபவ அறிவு

சந்திரன் என்ற வாலிபன் நன்கு படித்தவன். அவனுக்கு வேலை எதுவும் கிடைக்கவில்லை. அவனை அவனது பெற்றோரும் சகோதரர் களும் பணம் சம்பாதிக்கக் கையா லாகாதவன் எனக்கூறி கேலி செய்தனர். அவனுக்கு ஆறுதல் கூறிய வள் அடுத்த வீட்டுப் பணக்காரனின் மகள் பார்வதி. அவன் மீது அவள் இரக்கப்பட்டதால் அவன் அவள் தன்னை விரும்புகிறாளென எண்ணி அவளை மணக்க நினைத்தான். ஒரு நாள் அவன் பார்வதியிடம் தன் விருப்பத்தைச கூறவே அவள் "இதோ பார். உன்மீது நான் இரக்கப் படுவதால் நான் உன்னை மணப் பேன் என எண்ணாதே. எவன் என் பணத்திற்கு ஆசைப்படாமல் தானே சம்பாதித்து என்னை வைத்து குடும்பம் நடத்துபவனாக இருப் பானோ அவனைத் தான் மணந்து கொள்வேன். நீ நல்லவனே. ஆனால் கெட்டிக்காரன் அல்ல" என்று கூறி விட்டாள்.

இதைக் கேட்டு சந்திரன் மனம் உடைந்து போய் வாழ்க்கையை வெறுத்துக் காட்டிற்குப் போனான். அங்கு தற்கொலை செய்து கொள்ள ஒரு மரத்தில் கயிறைக் கட்டியபோது சிவானந்தர் என்ற பெரியவர் வந்து அவனைத் தடுத்தார். அவர் அவனது துயரத்தின் காரணம் அறிந்து "நீ ஆறறிவு படைத்தவன். அறிவே இல்லாத மிருகங்களெல்லாம் வாழும் போது நீயும் வாழலாமே. தற்கொலை புரிவது பாவம். நீ பணம் சம்பாதிக் கத்தானே ஆசைப்படுகிறாய். என் னுடன் நகருக்கு வா. என் எஜமான னிடம் சொல்லி உனக்கு ஒரு நல்ல வேலை வாங்கித் தருகிறேன்" என் றார்.

அது கேட்டுச் சந்திரன் சற்று

-பாபநாசம் சாமா-




அப்போது சிவானந்தர் அவர்களிடம் அவனை அடிக்க வேண்டாம் என்று கூறி" இவன் ஏன் திருடினான் என்று கேட்கலாம்" என்றார். திருடனும் அவரை வணங்கி தன் கஷ்டங்களை எல்லாம் கோர்வையாகக் கூறினான். அவன் கூறியதைக் கேட்டபின் யாவரும் அவன் மீது இரக்கமே கொண்டனர். சிலர் கண்ணீரும் உகுத்தனர்.

அப்போது சிவானந்தர் "இப்போது இவனுக்கு வேண்டியது உங்கள் இரக்கமும் கண்ணீரும் அல்ல, பணம் தான் வேண்டும். நம்மிடையே உள்ள ஒருவன் திருடனாக மாறினான் என்றால் அதற்குக் காரணம் நாம் தானே" என்றார். அது கேட்டு அங்கிருந்த யாவரும் 'ஆம்' என்பது போலத் தலையை ஆட்டினார்கள். சிலர் அவனுக்குப் பணமும் கொடுத்தார்கள்,

திருடனுக்கு நூறு வராகன்களுக்கு மேல் கிடைத்து விட்டது. அவன் எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் கிளம்புகையில் சிவானந்தர் அவனைக் கூப்பிட்டு "நீ இங்கு வரும் போது திருடனாக வந்தாய், போகும் போது ஒரு பிச்சைக்காரனாக ஆகிப் போகிறாய். உனக்குத் தன்மானம் என்பது கிடையாதா?" என்று கேட்டார்.

அத்திருடனும் "நான் என்ன செய்ய வேண்டும் என்று கூறுகிறீர்கள்?" என்ற கேட்டான். பெரிய

உற்சாகமடைந்தான். அவன் அவரோடு சேர்ந்து நகருக்குக் கிளம்பினான். இருவரும் போகும் வழியிலுள்ள ஒரு ஊர் சத்திரத்தில் இரவுப் பொழுதைக் கழிக்கத் தங்கினார்கள்,

இரவில் ஒரு திருடன் சிவானந்தரின் பணப்பையைத் திருடிக் கொண்டு ஓடலானான். அதைக் கண்ட சந்திரன் 'திருடன்' எனக் கத்தவே சத்திரத்திலிருந்த மற்றவர்கள் ஓடிப்போய்த் திருடனைப் பிடித்து இழுத்து வந்தார்கள். ஆளுக்கு ஒரு அடியாக அவர்கள் திருடனுக்குக் கொடுத்தார்கள், அவன் அந்த அடிகளின் வலி பொறுக்காமல் அலறினான்.

வரும் "உன் ஊர் எது? சொல். நானும் நீயும் அங்கு போகலாம். உன் கஷ்டங்கள் என்னவென்று தெரிந்து அவற்றைப் போக்கலாம்" என்றார். அப்போது அவன் அவரது கால்களில் விழுந்து "ஐயா நான் அனாதை. எனக்கு யாருமே இல்லை, என் குடும்பக் கஷ்டங்கள் என்று எல்லோர் முன் நான் சொன்னதெல் லாம் கட்டுக்கதை. இந்த ஊரில் யாரும் எனக்கு ஒரு வேலையும் கொடுக்கவில்லை. இந்த நூறு வராகன்களோடு வேறு ஏதாவது ஊருக்குப் போய் ஏதாவது வியா பாரம் செய்து பிழைப்பேன்" என் றான்.

பெரியவரும் "ஊரார் வேலை கொடுக்கவில்லை என்றால் உனக்கு என்ன நஷ்டம்? உனக்குத் தான் நன் றாக நடிக்கத் தெரிந்திருக்கிறதே. நீ சற்று முன் உன் கற்பனையால் எல் லோர் கண்களிலும் கண்ணீர் வர வழைத்து விட்டாயே, எனவே நீ நாடகம் போட்டு உன் வாழ்க்கையை நடத்து. அது கௌரவமான தொழில். திருடுவது மகாக் கேவலம்" என்று கூறித் திருடனிமிருந்து பணத்தை வாங்கி ஒரு கிழவருக்குக் கொடுத்தார்.

திருடன் அவர் கூறியபடியே நடப்பதாகச் சொன்னான், மறுநாள் சிவானந்தரும் சந்திரனும் அங்கிருந்து கிளம்பினர். அப்போது அவர் சந்திர னிடம் "சிலர் தம் தேவைக்காகத் திருடுகிறார்கள். சிலர் ஒரு வேலை யும் செய்யாமல் இருக்கத் திருடு





கிறார்கள். எனவே நாம் எதைக் கொடுத்தாலும் அதற்கு அவன் தகுந்தவனா எனக் கண்டே கொடுக்க வேண்டும்." என்றான்.

சந்திரனும் "உங்களைப் போல எல்லோரும் இருந்தால் உலகில் குற்றவாளிகள் ஏது?" என்று கூறி னான்.

பெரியவரும் "என் அறிவு எல்லோருக்கும் பயன்பட்டு விடாது. இவ்வுலகிற்குத் தேவை பணம். அறி வல்ல. அந்தத் திருடன் பணத்திற் காகத்தானே திருடினான்? அவன் வேலை செய்யாமல் பணம் சம்பா திக்க நினைத்தான். நீயும் பணம் சம்பாதிக்க நினைக்கிறாய், வேலை பார்க்கவும் நினைக்கிறாய். உன்னிடம் அறிவும் உள்ளது. அதனால் என் எஜமானனிடம் உன்னைப் பற்றிக் கூறுகிறேன். உனக்கு நிச்சயமாய் வேலை கிடைக்கும் என்றார்.

வழியில் சிவானந்தரின் நற்குணங் களைச் சந்திரன் கண்டான். ஓரிடத் தில் ஒரு நோயாளியைச் சுற்றி அவ னது உறவினர்கள் நின்று "இனி இவன் எங்கே பிழைக்கப் போகி றான்" என்று கூறிக் கொண்டிருந் தார். சிவானந்தர் அந்த நோயாளி யைப் பார்த்துவிட்டு "இவன் இறக்க மாட்டான். தக்க மருந்து கொடுத்தால் பிழைத்து விடுவான். போய் வைத் தியரை அழைத்து வாருங்கள்" என் றார்.

வைத்தியர் வந்ததும் நோயாளி பற்றி சிவானந்தர் அவரிடம் ஏதோ கூறினார். வைத்தியர் ஆச்சரியப்பட்டு அவரது கால்களில் விழுந்து வணங்கி "நான் இவ்வளவு நாட்களாக வைத் தியம் பார்த்து வருகிறேன். எனக்கு இது கொஞ்சம் கூடத் தெரியாமல் போயிற்றே. நீங்கள் தெய்வம் போல வந்து இந்த நோயாளியின் உயிரைக் காக்க வழி சொன்னீர்கள்" என்று பணிவுடன் கூறிச் சிகிச்சை செய் தான்.

நோயாளியின் உறவினர்கள் சிவா னந்தருக்குப் பணம் கொடுக்க முன் வந்தனர். அவரோ "வேண்டாம். எனக்குத் தெரிந்ததை வைத்தியரிடம் கூறினேன். கடவுள் கொடுத்த இந்த அறிவு காற்று, நீர் போன்றது. அது

எல்லோருக்கும் தாராளமாகப் பயன்பட வேண்டும். அதற்குப் பணம் வாங்கக் கூடாது" என்று கூறி அவர்கள் கொடுக்க வந்த பணத்தை ஏற்கவில்லை.

இன்னொரு இடத்தில் ஒரு பணக்காரரின் வைரக் கற்களைப் பரிசீலித்து விலை மதிப்பிட்டுக் கூறி னார். அதற்கும் பணம் எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை. முடிவில் அவர்கள் நகரை அடைந்தார்கள். சந்திரனைத் தம் வீட்டிலேயே தங்கும் படி சிவானந்தர் கூறினார்.

மறுநாள் சந்திரனை அழைத்துக் கொண்டு அவர் தம் எஜமானனின் வீட்டிற்குச் சென்றார். அந்த எஜ மானன் பட்டாடை உடுத்திப் பகட் டாக இருந்தான். கழுத்தில் நவரத்தின மாலை. உடலில் அத்தர் ஜவ்வாது வாசனை. அவன் சிவானந்தரைக் கண்டதும் "நீங்கள் இரண்டு நாட் களுக்கு முன்பே வருவதாகச் சொல்லி இருந்தீர்களே. நீங்கள் வராததால் எனக்கு இரண்டு லட்ச ரூபாய் வியாபாரம் கை நழுவிப் போயிற்று. குறித்த நாளில் வந்து விட வேண்டும் என்று இவ்வளவு வயதாகியும் உங்களுக்குத் தெரிய வில்லையா? அதனால் எனக்கு எவ்வளவு நஷ்டம் என்று பார்த் தீர்களா?" என்று கோபித்துக் கொண்டான்.

எதிர்பாராத விதமாகத் தாமதம் ஏற்பட்டு விட்டதென்றும் இனி அம்மாதிரி நடக்காது என்றும் சிவா னந்தர் கூறி மன்னிப்புக் கோரினார்.





எஜமானன் ஒருவாறு சமாதானம் அடைந்தான். அச்சமயம் சில வேலைக்காரர்கள் ஒருவனை இழுத்து வந்து "இவன் நம்பிக்கையாக வேலை செய்பவன் போல நடித்துப் பொருள்களைத் திருடி இருக்கிறான்" என்றனர்.

எஜமானனும் "இவனுக்குக் கந்தல் ஆடைகளை உடுத்திக் கல் உடைக்கும் வேலை கொடுங்கள். மாலையில் கழுதை மீது உட்கார வைத்து தெருக்களில் கொண்டு செல்லுங்கள் இப்படியே ஆறு வாரங்கள் நடக்கட்டும்" என்றான். இதைக் கேட்டும் சிவானந்தர் எதுவும் கூறாமல் இருந்தார். அது கண்டு சந்திரன் ஆச்சரியப் பட்டான் சத்திரத்தில் திருடனுக்குப் பரிந்து பேசிய அவர் ஏன் இப்போது எதுவும் கூறவில்லை என்று யோசிக்கலானான்.

அதன் பின் ஒரு வேலையாள் எஜமானனிடம் வந்து "ஐயா! என் மகன் கடும் காய்ச்சலில் இருக்கிறான். எனக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. என்னிடம் பணம் இல்லை. வைத்தியச் செலவுக்குப் பணம் கொடுத்து உதவ வேண்டும்" என்று கேட்டான். அவனோ "நான் உன் மாதிரி ஏழைகளுக்காகத்தான் அனுமார் கோவில் கட்டி இக்கிறேன். உன்னால் வைத்தியருக்குப் பணம் கொடுத்துக் கட்டுப்படி ஆகாது. அதனால் அனுமாரை வேண்டி ஒரு அர்ச்சனை செய். எல்லாம் சரியாகிவிடும் என்றான்.

சிவானந்தர் அப்போதும் பேசாமல் இருந்தார். அந்தப் பணியாளுக்காகப் பரிந்து பேசவில்லை. இதைக் கண்டும் சந்திரன் ஆச்சரியப்பட்டான். அப்போது எஜமானன் தன் உடல்நிலையைக் கூறி தான் பத்தியம் இருப்பதைக் கூறினான். அப்போது இரண்டு தினங்களுக்கு முன் வந்த ரத்தின வியாபாரி வரவே சிவானந்தர் அவன் கொண்டுவந்த ரத்தினக் கற்களைப் பரிசீலித்து அதன் மதிப்பையும் கூறினார்.

அந்த வியாபாரம் முடிந்து அந்த வியாபாரியும் போனபிறகு சிவானந்தர் தன் எஜமானனிடம் "இவன் சந்திரன். நன்கு படித்தவன். இவ

னுக்கு ஒரு வேலை போட்டு நீங்கள் கொடுக்க வேண்டும்" என்றார். எஜமானனும் "நீங்கள் சொன்னால் நான் மறுக்கவா போகிறேன்?" என்று கூறி சந்திரனிடம் சில கேள்விகள் கேட்டுத் திருப்தி அடைந்து ஆயிரம் வராகன் சம்பளத்தில் கணக்கைத் தணிக்கை செய்யும் வேலையைக் கொடுத்தான்.

சிவானந்தரும் சந்திரனும் வீடு திரும்பினார்கள். அப்போது சந்திரன் "தங்கள் அறிவை எஜமானன் பயன் படுத்திக் கொள்வதாகத் தெரிய வில்லையே" என்றான். சிவானந்த ரும் "வியாபார விஷயத்தில் அவருக்கு என்னால் நல்ல லாபம் கிடைக்கிறது. மற்ற விஷயங்களின் என் யோசனை யைக் கேட்கவும் மாட்டார். ஏற்கவும் மாட்டார். தன் அபிப்பிராயமும் முடிவும் சரி என அடித்துக் கூறி விடுவார். அவர் மகிழ்ச்சியாக இருந்த போது உன்னைப் பற்றிக் கூறியதால் உனக்கு வேலை கிடைத்தது" என்றார்.

"அவர் முதலில் உங்களைக் கோபித்துக் கொண்டதைப் பார்த்தால் நீங்கள் உடனே வேலையை உதறித் தள்ளி விடுவீர்கள் என்று நினைத் தேன்" என்று சந்திரன் கூறவே சிவானந்தரும் "பணம் அறிவைக் குருடாக்கி விடும் எனவே அவன் பேச்சை நான் பொருட்படுத்தக் கூடாது. அப்படிச் செய்தால் எனக் கும் அவனுக்கும் என்ன வித்தியாசம்? எனவே இவர் விஷயத்தில் எப்போது பேசாமல் இருக்க வேண்டும் என்ப தைத் தெரிந்தே நான் அப்படி இருக்கிறேன். எனக்கு அறிவு உள்ளது. பணம் இல்லை. அவருக் குப் பணம் இருக்கிறது அறிவு இல்லை. அதனால் இருவரும் ஒரு வரையொருவர் நம்பி இருக்கிறோம்" என்றார்.

சந்திரன் அவரது ஆழ்ந்த அறிவையும் அனுபவத்தையும் கண்டு வியந்தான். அவனும் அவரைப் போலவே நடந்து வாழ்வில் முன் 'னேற்றம் கண்டான்.



## அம்புலிமாமா செய்திகள்

### 'ஓல்ட் லேடிக்கு'ப் பூச்சுவேலை

பாரிஸிலுள்ள ஈபல் டவர் கட்டப்பட்டு 106 ஆண்டுகளாகின்றன. இதனை அங்குள்ள மக்கள் 'ஓல்ட் லேடி' என்று செல்லமாய் அழைக்கிறார்கள். இதற்கு வண்ணச் சாயம் பூசும் வேலை ஆரம்பமாகியுள்ளது. பிரெஞ்சுப் புரட்சியின் நூறாவது ஆண்டின் நினைவாக 1887ல் கஸ்டவ் அலெக்ஜாண்டர் ஈபல் இதனைக் கட்ட ஆரம்பித்தார். அப்போதிருந்து ஏழெட்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இதற்கு வண்ணச் சாயம் பூசப்படுகிறது. இப்போது பூசப்படுவது 17வது தடவை. இதன் உயரம் 320 மீட்டர் (1050 அடிகள்) இந்த டவரில் ஏறி சாயம் பூசுபவர்களுக்கு வழக்கமாகக் கொடுக்கப்படும் கூலியைவிட அதிகக் கூலியை ஈபல் கொடுத்தார். அதேபோல இப்போதும் இதற்கு வண்ணச் சாயம் பூசுபவர்களுக்கு ஊதியம் கொடுக்கப்படுகிறது. இதற்கு 50டன் பெயிண்ட் பிடிக்குமாம். சேன் நதிக்கரையில் அழகான பகுதியில் அமைந்துள்ள இதை ஆண்டிற்கு 6000,000 பேர்கள் பார்த்து மகிழ்கிறார்கள். அது 1889 முதல் பொது மக்கள் பார்வைக்குத் திறந்து விடப்பட்டது.

### முதலாவது விண்வெளிப் பெண் விமானி

அமெரிக்க விண்வெளிக் கப்பல் 'டிஸ்கவரர்' பிப்ரவரி 3ந் தேதி கிளம்பி ஒரு வாரம் பயணம் செய்துவிட்டு பூமிக்கு திரும்பி வந்தது. இதை விண்வெளியில் செலுத்திச் சென்ற பெண்மணி ஆலீஸ் காலின்ஸ். இவருக்கு வயது 38. இவர் சிறுவயதிலேயே விண்வெளியில் பறக்க வேண்டும் என்று ஆசை கொண்டவர். இவர் ஓட்டிய விண்வெளிக் கப்பல் ரஷ்ய விண்வெளி சோதனைக் கப்பல் "மீர்" என்பதை அணுகியதாம். இன்னும் நான்கு மரங்களில் விண்வெளியில் டிஸ்கவரர் மீண்டும் விண்வெளிக்குப் போய் 'மீர்'ருடன் சேரப் போகிறதாம்.

### திருஷ்ணாவில் பெண் கப்பலோட்டி

இரண்டாவது லெப்டினன்ட் தீபா சீதா தாஸ் என்ற பெண் கப்பலோட்டி இந்திய கப்பல் படையில் 1994ல் சேர்ந்தார் ஏழு மாதங்களுக்குப் பின் பம்பாயிலிருந்து சிங்கப்பூர் செல்லும் 'திருஷ்ணா' என்ற கப்பலின் பனிரெண்டு கப்பலோட்டிகளில் தீபா மட்டுமே பெண் கப்பலோட்டி. சென்ற பிப்ரவரி முதல் தேதி பம்பாயிலிருந்து கிளம்பி 'திருஷ்ணா' மாலத்தீவுகள், ஸ்ரீலங்கா, தாய்லாந்து, இந்தோனிஷியா, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்குப் போய்த் திரும்பி வந்தது. இது பயணம் செய்த தூரம் 11,000 கி.மீ.






**பா**ண்டவர்கள் தம் தாயாருடன் வாரணாவதத்திற்குப் புறப்படத் தயாரானார்கள். அவர்களுக்காக குதிரைகள் பூட்டப்பட்ட ரதங்கள் வந்தன. அவர்கள் பீஷ்மரிடமும் திருதராஷ்டிரனிடமும், விதுரரிடமும் துரோணரிடமும் கிருபாச்சாரியரிடமும் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். அவர்களும் பாண்டவர்களை ஆசீர்வதித்து அனுப்பினார்கள். பாண்டவர்கள் திடீரென வாரணவதத்திற்கு அனுப்பப்படுவதைக் கேட்ட மக்கள் "இதென்ன கொடுமை! நியாயமாக நாட்டை ஆளவேண்டியவர்கள் பாண்டவர்கள். இவர்களை திருதராஷ்டிரன் வாரணவதத்திற்கு அனுப்புகிறான் என்றால் இதில் ஏதோ மர்மம் உள்ளது. பாண்டவர்களுக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடக் கூடாது என்றே அவர்கள் கவலைப்பட்டார்கள்.

அப்போது சில பிராம்மணர்கள் பாண்டவர்களைப் பின் தொடர்ந்து சென்று "நாங்கள் இந்தப் பாவியான குருட்டு திருதராஷ்டிரன் நாட்டில் இருக்க மாட்டோம். பாண்டவர்கள் என்ன குற்றம் செய்தார்கள்? அவர்களது தந்தைதானே இந்த நாட்டை ஆண்டார்? இவர்களுக்குத்தானே நாடு கிடைக்க வேண்டும்? திருதராஷ்டிரன் அவ்வாறு செய்யாமல் இவர்களை எங்கோ அனுப்புகிறானே. நாமும் தருமருடன் இந்த நாட்டை விட்டுப் போய் விடுவோம்" என்று சொல்லலானார்கள்.

இதைக் கேட்ட தருமர் "பிராம்ம

-அரக்கு மாளிகை எரிந்தது-



ணேத்தமர்களே! திருதராஷ்டிரர் எங்கள் குடும்பத்தில் பெரியவர். அவர் எங்கு எங்களைப் போகச் சொன்னாலும் நாங்கள் போக வேண்டும். அது எங்கள் கடமை. நீங்கள் எங்கள் நலனை விரும்புபவர்கள் எனவே எங்களை ஆசீர்வதித்துவிட்டு உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்லுங்கள்" என்றார்.

பிராம்மணர்களும் தருமரின் பேச்சிற்குக் கட்டுப்பட்டு அவர்களை ஆசீர்வதித்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். அவர்களோடு மற்றவர்களும் செல்லவே விதுரர் ஒருவர் மட்டும் பாண்டவர்களோடு சற்று தூரம் சென்றார்.

அவர் தருமரிடம் மட்டும் வாரணாவதத்தில் துரியோதனன் அவர்களுக்காக அரக்கு மாளிகை கட்டி அதில் அவர்களை உயிரோடு எரிக்கத் திட்டம் போட்டிருப்பதைக் கூறினார். அவர்கள் அம் மாளிகையிலிருந்து தப்ப தான் ரகசிய சுரங்க வழி அமைக்க ஏற்பாடு செய்திருப்பதைக் கூறி சமயம் பார்த்து அதன் வழியே தப்பி வாரணாவதத்தை விட்டு வேறு எங்காவது போய்விட வேண்டும் என்று கூறிவிட்டுத் திரும்பிச் சென்றார்.

பாண்டவர்கள் வாரணாவதத்தை அடைந்தபோது அவர்களை வரவேற்க அந்நகர மக்கள் திரண்டு வந்தனர். நகர் அலங்கரிக்கப்பட்டு தோரணங்கள் கட்டப்பட்டிருந்தன. பாண்டவர்கள் தங்களை வரவேற்க வந்தவர்களுக்கு நன்றி கூறிப் பரிசுகளையும் அளித்தார்கள்.

புரோசனன் அவர்களை வரவேற்று அவர்களைத் தங்க வைக்க ஒரு மாளிகைக்கு அழைத்துச் சென்றான். தருமர் எவ்வித ஆட்சேபணையும் கூறாமல் அவன் அழைத்துச் சென்ற மாளிகைக்கே தன் தாயாருடனும் சகோதரர்களுடனும் சென்றார். அவர்களுக்கு உணவுக்கும் ஏற்பாடு செய்து பத்து நாட்கள் அதே மாளிகையில் தங்க வைத்தான்.

அதன் பின்பு புரோசனன் தருமரிடம் "உங்களுக்காகப் புதிதாக மாளிகை கட்டப்பட்டுள்ளது. வாருங்கள். உங்களை அங்கு அழைத்துச் செல்கி

றேன்" என்றான். எனவே தருமரும் அதற்கு உடனடியாக இணங்கினார். அவருக்கு அந்த மாளிகை பற்றி முன்பே தெரியும். எனவே அவர் புரோசனனுக்குச் சந்தேகம் ஏற்படாத படி நடந்து கொண்டார்.

அதன்பின் அவர் பீமனைத் தனியாக அழைத்துப் போய் விதுரர் கூறியதை விவரமாகச் சொன்னார். பீமனும் "அப்படியானால் நாம் இப்போதே இங்கிருந்து போய் விடலாமே" என்றான்.

தருமரும் "அப்படிச் செய்தால் எதிரிகள் எச்சரிக்கை அடைந்து வேறு திட்டம் போடுவார்கள். அதனால் நாம் இந்த வீட்டில் எரிந்து போனதாக எதிரிகளை நம்பவைத்து நாம் தப்பிவிட வேண்டும். விதுரரின் ஆள் இந்த மாளிகையிலிருந்து வெளியேற ஒரு ரகசிய சுரங்கப்பாதை அமைத்துக் கொணடிருக்கிறான். அது தயாரானதும் நாம் இங்கிருந்து தப்பிப் போய் விடலாம்" என்றார்.

விதுரர் அனுப்பிய ஆள் ரகசிய சுரங்கப் பாதையை அமைத்துவிட்டு அதை தருமருக்கும் தெரிவித்தான். பிறகு அவன் "இந்தப் புரோசனன் வரும் அமாவாசைக்கு முதல் நாள் இந்த மாளிகைக்குத் தீவைக்கத் தீர்மானித்திருக்கிறான். அன்றிரவு நீங்கள் ரகசிய சுரங்கப் பாதை வழியாகத் தப்பி கங்கைக் கரைக்குச் செல்லுங்கள் அங்கு விதுரர் ஏற்பாடு செய்துள்ள ஒரு படகு தயாராக இருக்கும்.



அதில் ஏறி எதிர்க் கரைக்குப் போய் விடுங்கள்" என்று கூறினான்.

தருமரும் பீமனும் தாம் இருக்கும் வீட்டைப் பற்றி சந்தேகப்படுவது போலவோ அல்லது புரோசனன் மீது அவநம்பிக்கை கொண்டது போலவோ காட்டிக் கொள்ளவில்லை. புரோசனனும் பாண்டவர்கள் தன்னை நம்பி விட்டார்கள் என்று எண்ணி மகிழ்ந்து திருப்தி அடைந்தான்.

அமாவாசைக்கு முதல் நாள் குந்தி தேவி பிராம்மணர்களுக்கும் ஏழைகளுக்கும் தானம் செய்தாள். அன்று ஒருமலைச் சாதிப் பெண் தன் ஐந்து மகன்களுடன்வந்து குந்தியிடம் தானம் வாங்கிக் கொண்டு அந்த மாளிகையில் தங்கி இரவிலும் அங்கேயே

படுத்துத் தூங்கினாள்.

பீமன் தன் சகோதரர்களையும் தாயாரையும் ரகசிய சுரங்கப் பாதைக்குள் அனுப்பிவிட்டு புரோசனன் அம் மாளிகையில் படுத்திருந்த அறைக்குத் தீமூட்டி விட்டுத் தானும் சுரங்கப் பாதைக்குள் சென்றான். அரக்கால் செய்யப்பட்ட அம்மாளிகையில் தீ சட்டென நாலாபுறமும் பரவியது. அத் தீயில் புரோசனனோடு அன்றிரவு அங்கு படுத்திருந்த மலைச் சாதிப் பெண்ணும் அவளது ஐந்து மகன்களும் கருகி இறந்து போனார்கள்.

ஊரார் மாளிகை எரிவது கண்டு ஓடி வந்தனர். ஆனால் அதனை அணுக முடியவில்லை. தீ அடங்கியதும் புரோசனனின் வெந்த உடலையும் ஒரு பெண்ணும் ஐந்து ஆண்களும் கருகி இறந்து கிடப்பதைக் கண்டு அவர்கள் குந்தி தேவியும் பாண்டவர்களுமே தீயில் எரிந்து போய்விட்டார்கள் என எண்ணிக் கண்ணீர் வடித்தார்கள்.

சுரங்கப் பாதை வழியே சென்று பாண்டவர்கள் ஒரு காட்டுப் பகுதியை அடைந்தார்கள் அப்போது குந்தி தேவியால் நடக்க முடியாது போகவே பீமன் அவளைத் தன் தோளில் தூக்கிக் கொண்டு நடந்தான். யாவரும் கங்கைக் கரையை அடைந்தார்கள். அங்கு விதுரரால் அனுப்பப்பட்ட படகோட்டி படகுடன் தயாராக இருந்தான்.

பாண்டவர்கள் அந்தப் படகில் அமர்ந்து எதிர்க் கரையை அடைந்தார்கள். அவர்கள் படகோட்டியை



அனுப்பிவிட்டு அங்கிருந்து நடந்து சென்றனர். அவர்கள் மிகவும் களைத்துப் போகவே பீமன் எல்லோரையும் தன் தோளின் மீது ஏற்றிக் கொண்டு சென்றான். இருட்டில் நட்சத்திரங்களைக் கொண்டு அவன் சென்று அவர்களை ஒரு பாறையின் மீது படுக்க வைத்தான். தானும் அங்கேயே உட்கார்ந்து கொண்டான்.

அப்போது குந்திதேவி பீமனிடம் "பீமா! எனக்கு ஒரே தாகமாக இருக்கிறது. எங்கிருந்தாவது தண்ணீர் கொண்டு வா" எனக் கூறவே பீமனும் எல்லோரையும் அங்கிருந்து தூக்கிக் கொண்டுபோய் ஒரு மரத்தின் கீழ் படுக்க வைத்துவிட்டுத் தண்ணீரைத் தேடிச் சென்றான்.

கொஞ்சம் தூரம் போய் பீமன் நாலா புறமும் பார்த்தபோது ஓரிடத்தில் ஒரு குளம் இருப்பதைக் கண்டான். அவன் அங்கு போய்க் குளித்துவிட்டு நீரை எடுத்துக் கொண்டுதன் தாயையும் சகோதரர்களையும் விட்டுச் சென்ற மரத்தடிக்கு வந்தான். அங்கு அவர்கள் யாவரும் நன்கு தூங்கிக் கொண்டிருப்பதை அவன் கண்டான்.

மெய் மறந்து தூங்கும் அவர்களை அவன் எழுப்ப விரும்பவில்லை. அதனால் அவர்கள் தாமே எழுந்திருக்கட்டும் என்று எண்ணி பீமன் அங்கேயே உட்கார்ந்தான்.

வாரணாவதத்தில் அரக்கு மாளிகை எரிந்து போயிற்று என்ற விஷயம் ஹஸ்தினாபுரத்திற்கு எட்டியது. அம் மாளிகையில் புரோசனன் எரிந்து போனதோடு ஒரு ஸ்திரீயும் ஐந்து



ஆண்களும் கருகிப் போயினர் என்பது கேட்டு அவர்கள் குந்தியும் பாண்டவர்களுமாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார்கள்.

பாண்டவர்கள் இறந்தார்களே என்று பீஷ்மர் முதலானோர் மிகவும் வருந்தினார்கள். திருதராஷ்டிரனோ அச்செய்தி கேட்டுத் தன் நினைவை இழந்து விழுந்து விட்டான். விதுரருக்குப் பாண்டவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து தப்பிச் சென்றிருப்பது தெரியும். ஆனால் அதை வெளிப்படுத்தாமல் அவரும் மற்றவர்களோடு சேர்ந்து பாண்டவர்கள் இறந்து போனதற்காகக் கண்ணீர் வடித்தார்.



பாண்டவர்கள் படுத்துத் தூங்கிய காடு இடும்ப வனம். அதில் இடும்பன் என்ற ராட்சஸன் இருந்தான். அவன் மிகுந்த வலுவான உடல் கொண்டவன். கருத்தமேனி. பெரிய வயிறு. ஆட்டுக்கடா கொம்புகளைப் போல வளைந்து திருகிய மீசை. அவன் மனிதர்களைக் கொன்று சாப்பிடுபவன்.

அவன் அன்று காட்டில் அலைந்து திரிந்துவாறே ஒரு மரத்தின் மீது ஏறிச் சுற்றிலும் பார்த்தான். ஓரிடத்தில் ஆறு மனிதர்கள் படுத்திருப்பது அவனுக்குத் தெரிந்தது.

அவன் தன் தங்கை இடும்பியைக் கூப்பிட்டு "அதோ பார்! அந்த மரத்தின் கீழ் ஆறு மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். நீ போய் அவர்களைத் தூக்கிக் கொண்டு வா. நாம் இருவரும் திருப்தியாக அவர்களை விழுங்கலாம்" என்றான்.

இடும்பியும் அப்படியே செய்வதாகக் கூறிவிட்டு அவர்கள் படுத்திருந்த மரத்தடியே வந்து சேர்ந்தாள். அங்கு படுத்திருந்த குந்தியையும் தருமரையும், அரிஜுனனையும், நகுலனையும், சகதேவனையும் அவள் கண்டாள். அவர்களருகே காவல் காப்பவன் போல பீமன் உட்கார்ந்திருப்பதையும் அவள் பார்த்தாள்.

அவளுக்கு பீமன் மிக அழகாக இருப்பது போலத் தோன்றியது. அவள் அவனைத் தன் கணவனாக அடைய விரும்பினாள். அதனால்

அவள் தன் அண்ணன் கூறியபடி செய்யவில்லை. பீமனின் மனதைக் கவர என்ன வழி என்று அவள் யோசிக்கலானாள்.

அவளுக்கு ஒரு வழி தெரிந்து விட்டது. அவள் உடனே ஒரு அழகிய மானிடப் பெண்ணாக மாறினாள். பட்டாடைகள் சலசலக்க நாணிக் கோணிக் கொண்டு அவள் பீமனின் முன் போய் நின்று "ஆகா! நீங்கள் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள்! தாங்கள் யார்? எந்த நாட்டைச் சேர்ந்தவர்? இங்கே படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் இவர்களெல்லாம் யார்? வயதான அழகிய அந்த அம்மையார் யார்? இந்த வனத்தில் என் அண்ணன் இடும்பன் இருப்பது உங்களுக்குத் தெரியாதா? அவன் கொடியவன். குரூர குணம் படைத்த வன். ஒருவேளை இதை அறியாமல் தான் இவர்கள் கவலையில்லாமல் தூங்கிக் கொண்டிருக்கிறார்களோ?" என்று கேட்டாள்.

பீமன் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்து "பெண்ணே! நீயோ இடும்பன் என்ற அரக்கனின் தங்கை என்று கூறுகிறாய். ஆனால் அழகிய மானிடப் பெண் போல் வந்திருக் கிறாய். எங்களை உன் அண்ணனிட மிருந்து காக்க போவதாகவும் கூறு கிறாய். உன் உண்மையான நோக்கம் தான் என்ன?" என்று கேட்டான்.

அவளும் "என் அண்ணன் உங் களை எல்லாம் தூக்கி வரும்படி என்னிடம் சொல்லி என்னை இங்கு அனுப்பி இருக்கிறான். ஆனால் உங்கள் அழகைக் கண்டு என் மனம் மாறிவிட்டது. உங்களை நான் மணக்க விரும்புகிறேன். எனவே என் அண் ணன் கூறியபடி உங்களை நான் தூக்கிக் கொண்டு போகப் போவ தில்லை. என் விருப்பத்தை நிறை வேற்றுவதாகக் கூறினால் உங்களை பத்திரமான இடத்தில் கொண்டு போய்ச் சேர்க்கிறேன். அங்கு நாம் எல்லோரும் எவ்வித பயமும் இல் லாமல் சுகமாகக் காலம் கழிக்கலாம்" என்றாள்.



அம்புலிமாமா
அனுபந்தம் - 77

நம் நாட்டு
மரங்கள்:

# புளியமரம்

சென்ற இதழில் வேப்ப மரத்தைப் பற்றிப் படித்தீர்கள். அதில் அம்மரம் பற்றி ஒரு கதை கூறி அதன் நிழல் ஆரோக்கியத்திற்கு நல்லது என்றும் புளிய மர நிழல் உடல் நலனுக்குக் கெடுதல் எனவும் கூறி இருந்தோம். புளியமரம் பற்றியும் ஒரு கதை உண்டு. வங்காள மதபோதகர் சைதன்ய மகாப் பிரபு பிருந்தாவனத்திற்கு வந்து ஒரு பெரிய புளிய மரத்தின்கீழ் அமர்ந்துதான் சொற்பொழிவு ஆற்றினாராம். அந்த மரம் இன்றும் இருப்பதாகக் கூறுகிறார்கள்.

புளியமரம் நீண்டகாலம் இருக்கும் இதன் இலைகள் சிறியவை. வரிசையாய் அமைந்திருக்கும் இளம் துளிராக இருக்கையில் மஞ்சள், இலைப்பச்சை நிறத்தில் தோன்றி இளம் சிவப்பு நிறத்தில் இருக்கும். மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூக்கும். காய்கள் நீண்டு வளைந்து இருக்கும். ஒவ்வொரு காயிலும் மூன்றிலிருந்து பத்து வரை கொட்டைகள் இருக்கும். விதைகளைச் சுற்றி சதைப்பற்று இருக்கும். சில புளியங்காய்கள் தித்திப்பாகவும் இருக்கும். காய் பழமாகும் போது சதைப் பற்றி ஓட்டிலிருந்து பிரிந்து போய் விடும்.

புளியைக் கூட்டு, சாம்பார், ரசம் போன்றவைகளைத் தயாரிக்க உபயோகிக்கிறார்கள். புளியம் இலையும், கொட்டையும், சதைப்பற்றும் மருந்திற்குப் பயன்படுகின்றன.

புளியம் பலகை உறுதியானது. இவற்றால் வண்டிச் சக்கரங்கள், விட்டங்கள் போன்றவற்றைச் செய்கிறார்கள். சாலையின் இரு புறங்களிலும் நிழலுக்காக இம்மரங்களை வளர்க்கிறார்கள்.



நம்நாட்டு ரிஷி முனிவர்கள்-1

# வசிஷ்டர்

பாரதக் கலாச்சாரத்திற்குப் பண்பாட்டிற்கும் இலக்கியத்திற்கும் உருக் கொடுத்தவர்கள் பழங்காலத்து ரிஷிகளும் முனிவர்களுமே. இவர்கள் தம் வாழ்வை பேர நிலை அடைய அர்ப்பணித்தவர்கள். இப்படி அவர்கள் அடைந்த ஞானத்தைத் தக்கவர்களுக்கு அளித்து அவர்களைத் தம் குருகுல வாசத்தில் இருக்கச் செய்தனர்.

இவ்விதமாய் ரிஷிகள் நமது முதல் குருவாக விளங்கினர். அவர்கள் அரச குமாரர்களுக்கு மட்டுமல்லாமல் மற்ற தகுதி வாய்ந்த மாணவர்களுக்கும் கல்வி புகட்டி வந்தார்கள். சீடர்கள் ரிஷிக்களின் ஆசிரமங்களில் இருந்து பணிவிடைகள் செய்து கல்வி பயின்று வந்தனர்.

இலக்கிய மேதைகளான வால்மீகியும் வியாசரும் ரிஷிக்களே. நம் ரிஷிக்களில் முக்கிய இடம் பெறுபவர் வசிஷ்டர். அவர் உயரிய அறிவு பெற்று அதனால் பல அரிய சக்திகளை அடைந்தவர். ஆனால் அவற்றை சாதாரண நிலையில் உபயோகிக்கவில்லை.

ஒருமுறை விசுவாமித்திரர் என்ற மன்னர் காட்டில் வேட்டையாடச் சென்றார். அவர் வசிஷ்டரின் ஆசிரமத்தை அடையவே வசிஷ்டரும் அவரையும் அவரது பெரும் படையையும் வரவேற்று உபசரித்து எல்லோருக்கும் அறுசுவை உண்டி அளித்தார். காட்டில் சொற்ப நேரத்தில் வசிஷ்டரால் எப்படி அறுசுவை உண்டி தயாரிக்க முடிந்தது என்று அவர் எண்ணி ஆச்சரியப்பட்டார்.

அதுபற்றி அவர் வசிஷ்டரிடமே கேட்டார். வசிஷ்டர் அங்கிருந்த காமதேனுவை காட்டவே அவர் அதனைத் தனக்குக் கொடுத்து விடும்படிக் கேட்டார்.

வசிஷ்டரும் "நானாக இதை யாருக்கும் கொடுத்துவிட முடியாது. அதுவாக இஷ்டப்பட்டு எங்கு இருக்குமோ அங்கிருக்கும். நீங்கள் வேண்டுமானால் முயன்று அழைத்துச் செல்லுங்கள்" என்றார்.

விசுவாமித்ரர் காமதேனுவைத் தன்னோடு இழுத்துச் செல்ல முயன்றார். அது அவரோடு செல்ல மறுத்து வசிஷ்டரிடம் தஞ்சம் புகுந்தது. அப்போதும் விசுவாமித்ரர் காமதேனுவை இழுத்துச் செல்லத் தன் படைகளை ஏவ, அது வீரர்களைச் சிருஷ்டி செய்தது. அந்த வீரர்கள் விசுவாமித்திரரின் படை வீரர்களை அடித்துத் துரத்தினார்கள்.

தன்படைபலம் தபோ பலத்தின் முன் நிற்க முடியவில்லை எனக் கண்ட விசுவாமித்திரர் நாட்டை விட்டுக் காட்டிற்குப் போய் கடுந்தவம் புரிந்தார். அப்போதும் அவருக்கு வசிஷ்டர் மீது ஏற்பட்ட பொறாமை போகவில்லை. மேலும் வசிஷ்டர் அவரை பிரம்ம ரிஷி என அழைக்க மறுத்தது அவரது ஆத்திரத்தை அதிகரித்தது. மனிதன் எவ்வளவு உயர்ந்தவனானாலும் அவனுக்கும் ஓரிரு பலஹீனங்கள் உண்டு என்பதனை விசுவாமித்திரர் வாயிலாக உலகம் நன்கு தெரிந்து கொண்டது!

ஒரு நாள் விசுவாமித்திரர் வசிஷ்டரைக் கொன்றுவிட வேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்டு அவரது ஆசிரமத்திற்குச் சென்றார். அப்போது வசிஷ்டரும் அவரது மனைவியும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு மறைந்து நின்று அவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்கலானார்.

வசிஷ்டரின் மனைவி அருந்ததி. அவள் தன் கணவரிடம் "நீங்கள் ஏன் விசுவாமித்தி ரரை பிரம்மரிஷி என்று கூற மறுக்கிறீர்கள்? நீங்கள் மட்டும் அவ்வாறு கூப்பிட்டு விட்டால் உங்களிருவரிடையே இருக்கும் பகைமை மறைந்து விடுமே" என்றாள்.

வசிஷ்டரும் "விசுவாமித்திரர் கடும் தவம் புரிந்து அரிய சாதனை நிகழ்த்தி இருக்கி றார். ஆனால் பிரும்ம ரிஷியாக அவர் இன்னும் சில நற்குணங்களை அடைய வேண்டும். நான் இப்போது அவரை பிரம்மரிஷி என்று கூறிவிட்டால் அவர் மிகவும் மகிழ்ந்து அந்த நற்குணங்களை அடைய முயலாமலே இருந்து விடுவார். அவரது நன்மையைக் கருதித்தான் நான் அவரை பிரம்மரிஷி என்று என் வாயால் கூறவில்லை" என்றார்.

இதைக் கேட்ட விசுவாமித்திரரின் மனம் முற்றிலும் மாறிவிட்டது. அவர் உடனே போய் வசிஷ்டரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கோரினார்.

வசிஷ்டரின் மனைவி அருந்ததியும் சிறந்த தபஸ்வினி. வசிஷ்டரும் அருந்ததி யும் தம் பூத உடல்களை விட்டதும் நட்சத் திரங்களாகி ஆகாயத்தில் பிரகாசிக்கலா னார்கள். சப்த ரிஷிமண்டலம் எனப்படும் நட்சத்திரக் கூட்டத்தில் வசிஷ்டரும் அதன ருகே அருந்ததியும் நட்சத்திரங்களாகிப் பிரகாசித்து வருகிறார்கள் என்று கருதப் பட்டு வருகிறது.



# உங்களுக்குத் தெரியுமா?

1. ரஷ்ய அரசர்களையும் அரசிகளையும் எந்தப் பெயரில் அழைக்கிறார்கள்?
2. நம் நாட்டு வரலாற்றில் 1942 ஆகஸ்ட் 9ந்தேதியின் சிறப்பு என்ன?
3. சூயஸ் கால்வாய் எப்போது வெட்டப்பட்டது? அது எந்த இரு கடல்களை இணைக்கிறது?
4. நம் நாட்டில் எந்த இரு ஸ்டேஷன்களிடையே முதன்முதலில் ரயில் வண்டி ஓடியது?
5. இரண்டாவது உலகப் போரில் ஆக்ஸிஸ் (அச்சு) நாடுகள் எனப்படும் நாடுகள் யாவை?
6. நம் நாட்டில் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் திருவிழா எது?
7. உலகிலேயே மிகப் பெரிய தீவு எது?
8. நம் நாடு முதன் முதலில் கலந்து கொண்ட கிரிக்கெட் டெஸ்ட் போட்டியின் கேப்டன் யார்?
9. உலகில் தரை மீது குளிர் மிகுந்த பகுதி எது?
10. ஒலம்பிக் விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டு முதன்முதலாகத் தங்கப்பதக்கம் பெற்ற நம் நாட்டுக்காரர் யார்? எந்த ஆண்டில்?
11. எலெக்ட்ரிக் மோட்டாரைக் கண்டு பிடித்தவர் யார்?
12. 'உதயசூரியனின் நாடு' என எந்த நாட்டைக் கூறுகிறோம்?
13. டச் காலனியாக இருந்தபோது நியுயார்க்கின் பெயர் என்ன?
14. சைனாவின் முதலாவது சக்கரவர்த்தி யார்?
15. அமைதிக்கான நோபல் பரிசைப் பெற்ற அமெரிக்க நீக்ரோத் தலைவர் யார்?
16. எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த முதலாவது பெண்மணி யார்? எப்போது ஏறினார்?

## விடைகள்

1. ஜார், ஜாரினா.
2. 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம்.
3. 1869ல். செங்கடலையும் மத்திய தரைக் கடலையும் இணைப்பது.
4. பம்பாய்-தானே. 1853ல்.
5. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான்.
6. கும்பமேளா, மகாமகம்.
7. கிரீன்லாந்து.
8. சி.கே. நாயுடு.
9. அண்டார்டிகாவின் ஒஸ்டக் ஸ்டேஷன் - (87.6 செல்சியஸ்)
10. 1900ல் பாரிஸில் நடந்த போட்டிகளில் கலந்து கொண்ட நம் நாட்டுப் பெண்மணி நார்மன் பீரீடகார்ட்.
11. மைக்கேல் பாரடே.
12. ஜப்பான்.
13. நியூ ஆம்ஸ்டர்டாம்.
14. குப்ளாய்கான் (செங்கிஸ்கானின் பேரன்)
15. மார்ட்டின் லூதர் கிங்.
16. ஜப்பானைச் சேர்ந்த ஜுங்கோடாபே. 1975 மே 16ல்.



# படிப்பு எதற்கு?

ரங்கபுரத்து ராஜாங்கனின் இரு மகன்களும் தம் தந்தையைப் போல் வியாபாரம் செய்ய விரும்பாமல் படித்துப் பண்டிதர்களாக விரும்பினார்கள். ராஜங்கனின் மூத்தமகன் ரங்கநாதன் எதை ஒரு தடவை கேட்டாலும் அதை உடனே அப்படியே திரும்பச் சொல்லும் சக்தி பெற்றவன். அவை எவ்வளவு கடினமான சொற்களாலானலும் அவனுக்கு சிரமமே இல்லை.

இரண்டாவது மகன் சாரங்கன் எந்த நூலையும் ஆழ்ந்து படித்து அதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளவே முயல்வான். ஏதாவது ஒரு சொல்லிற்கு அர்த்தம் தெரியா விட்டால் உடனே அகராதியைப் புரட்டிப் பார்த்து அதன் பொருளைத் தெரிந்து கொள்வான்.

ஒரு நாள் ராஜங்கனின் வீட்டிற்கு ஞானசேகரர் என்ற பெரியவர் வந்தார். அவர் ஆசிரமம் அமைத்து குருகுலம் நடத்தி வந்தார். அவர் அவ்வப்போது பல இடங்களுக்குப் போய் சீடர்களைத் தேர்ந்தெடுத்து ஆசிரமத்திற்கு அழைத்துப் போய் கல்வி புகட்டி வந்தார்.

ராஜங்கன் தன் இரு மகன்களைப் பற்றி அவரிடம் கூறினான். மகன்களில் ஒருவன் வேண்டுமானால் படித்துப் பண்டிதனாகட்டும். ஆனால் மற்றவன் என் வியாபாரத்தை நடத்த வேண்டும்" என்றான்.

ஞானசேகதர் ரங்கநாதனை அழைத்து அவன்படித்ததைப் பற்றிக் கேட்டார். அவனோ தான் படித்ததை எல்லாம் கடகடவென்று அப்படியே ஒப்பிப்பது கேட்டு ஆச்சரியப்பட்டார். எந்த நூலில் எந்தப் பக்கத்தில் என்ன இருக்

-கே. பாலாஜி-



கிறது என்பதை உடனே கூறி னான்.

அதன்பின் அவர் சாரங்கனிடம் அவன் படித்தது பற்றிக் கேட்டார். அவன் பல புத்தகங்களைப் படித் திருந்தபோதிலும் அவற்றில் தனக்குப் பிடித்தமான பகுதிகளை மட்டும் நன்கு படித்துத் தெரிந்து வைத்திருந்தான். அவன் அவற்றின் பொருளையும் விளக்கியும் கூறி னான். ஞானசேகரனும் "ரங்க நாதனைப் போல முழுப் புத்த கத்தையும் ஒப்பிக்க உன்னால் முடியுமா? என்று கேட்கவே சாரங் கனும் "புத்தகம் முழுவதையும் நினைவில் வைத்துக் கொள்ளும் சக்தி எனக்கு இல்லை. நான் எனக்கு வேண்டிய பகுதிகளை மட்டும் சிரமப்பட்டுப் புரிந்து கொள்கிறேன்" என்றான்.

ஞானசேகரர் ராஜாங்கனைக் கண்டு "உன் மூத்த மகனை வியாபாரத்தில் வைத்துக் கொள்ள லாம். இளையவனை பண்டிதனாக விடலாம். எதற்கும் இருவரையும் நான் என் ஆசிரமத்திற்கு அழைத் துக் கொண்டு போகிறேன். கொஞ்ச நாட்களுக்குப் பின் அவர் களை அனுப்புகிறேன். அது சரி. இப்போது யாராவது உடல் நலக் குறைவாக இருக்கிறார்களா? நான் அவருக்கு வைத்தியம் செய்து விட்டுப் போகிறேன்" என்றார்.

ராஜங்கன் இதனைத்தன் குடும் பத்தவரிடம் கூறவே அவர்களும் ஞானசேகரரிடம் வந்து தமக்குள்ள நோய்ப் பற்றிக் கூறினார்கள். அவர்களில் ராஜாங்கனின் தாயின் நோய் தான் விசித்திரமானது. அவளுக்குப் பூனையைப் பார்த்தால் தலைவலி வருகிறதாம். பூனை போய் விட்டால் தலைவலியும் போய்விடுகிறதாம்.

அதுகேட்டு ஞானசேகரர் ஒரு ஓலையில் ஏதோ எழுதி ராஜங்கத் திடம் கொடுத்து "இதில் உன் தாயின் நோய்க்கான சிகிச்சை முறையை எழுதி இருக்கிறேன். இதை இரவில் தனியாக இருந்து படித்துப் புரிந்து கொள். நாளை காலை உன்னை நான் பார்க்கும்

போது விவரம் சொல். அதுவரை இதுபற்றி யாரிடமும் கூற வேண்டாம்" என்றார்.

அதன் பின் ரங்கநாதனுக்கும் சாரங்கனுக்கும் ஒவ்வொரு ஓலைச் சுவடியைக் கொடுத்து "உங்களுக்குக் கொடுத்துள்ளது வைத்தியம் சம்பந்தப்பட்ட நூல். இதை இன்றிரவு படித்துப் புரிந்து கொள்ள முடிகிறதா என்று பாருங்கள்" என்றார்.

மறுநாள் காலையில் அவர்கள் கூடிய போது ராஜாங்கன் "ஐயா! எனக்கு சமஸ்கிருதம் தெரியாது. அதனால் நீங்கள் கொடுத்த ஓலையைப் படிக்க முடியவில்லை" என்றான். ரங்கநாதனோ "நீங்கள் கொடுத்த ஓலைச் சுவடியை இப்போது பாராமல் அப்படியே ஒப்பிப்பேன்" என்றான்.

அவனை ஒப்பிக்கச் சொல்லிக் கேட்ட பின் ஞானசேகரர் "பேஷ் ஒரு முறைபடித்ததும் ஒப்பிக்கிறாயே" என்று பாராட்டினார். பிறகு அவர் சாரங்கனைப் பார்க்கவே அவனும் "அச்சுவடியில் இருந்ததைப் புரிந்து கொள்வது மிகவும் சிரமமாக இருந்தது. ஆனால் இதில் ஓரிடத்தில் என் பாட்டியின் நோய்பற்றி குறிப்பிடப்பட்டிருந்ததைக் கண்டேன். அதைப்படித்து அகராதியின் உதவி கொண்டு புரிந்து கொண்டேன். பாட்டியின் நோயைப் பிரண்டையைக் கொண்டு குணப்படுத்த முடியும் என்று அதில் உள்ளது"



என்றான்.

அப்போது ஞானசேகரர் "ரங்கநாதன் எதையும் ஒரு முறை படித்தால் நினைவில் வைத்துக் கொள்பவன். எனவே வியாபாரக் கணக்குகளை எல்லாம் ஒரு முறை படித்தாலே அவனுக்கு ஞாபகம் இருக்கும். எனவே அவனுக்கு ஆசிரமத்தில் வியாபார முறைகளைப் பற்றி விவரமாய் போதிக்கிறேன்" என்றான்.

அது கேட்டு ரங்கநாதன் "நான் படித்துப் பண்டிதராகவே விரும்புகிறேன்" எனவே ஞானசேகர் ராஜாங்கனைப் பார்த்தார். அவனும் "நீங்கள் சொன்னது சரியே. இவன் தான் படித்ததை நினைவில் வைத்துக் கொள்கிறான். வியாபாரத்தில் கணக்கு நன்கு நினைவில் இருக்க வேண்டும். அந்த சக்தி இவனுக்கு உள்ளது. ஆனால் இதனால் என்ன பயன்? எல்லாம் இவனால் திருப்பிப் கூறி முடியுமே ஒழிய அதன் அர்த்தம் இவனுக்குத் தெரியாது. அவனுக்குக் கொடுக்கப் பட்ட சுவடியில் பாட்டிக்கு வைத்தியம் செய்ய வழி கூறப்பட்டிருப்பதை இவனால் புரிந்து கொள்ள முடியவில்லையே. சம்ஸ்கிருதம் தெரியாத எனக்கும் இவனுக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. ஆனால் சாரங்கனுக்குப் படிப்பதோடு அதைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசை இருக்கிறது. அதற்காக முயற்சியும் செய்கிறான். இப்படிப்பட்டவன் தான் பண்டிதராகக் கூடியவன் எனவே அவன் பண்டிதராக ஆகட்டும்" என்றான்.

ராஜாங்கத்தின் தாயாருக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது. அப்போது எல்லோரும் ஞானசேகர் கூறியதை ஏற்றுக் கொண்டார்கள். ரங்கநாதன் ஞானசேகரரின் ஆசிரமத்தில் வியாபாரத்தைப் பற்றி கற்றுத் தெரிந்து கொண்டான். சாரங்கனோ ஆழ்ந்து படித்துப் பண்டிதரானான்.





# திருட்டு வெளிப்பட்டது!

ஒரு மீனவ கிராமத்தில் வீரன் என்றும் வீராயி என்றும் கணவன் மனைவியர் இருந்தனர். வீரனுக்கு அறிவு போதாது. அதனால் வீராயிதான் சாமர்த்தியமாகக் குடும்பத்தை நடத்தி வந்தாள். வீரன் மற்ற மீனவர்களோடு சேர்ந்து மீன் பிடிக்கக் கட்டு மரத்தில் கடலுக்குப் போவான். எல்லோரும் தாம் பிடித்துக் கொண்டு வந்த மீன்களை எடுத்துச் செல்வார்கள். வீரன் பிடித்து வந்த மீன்களை வீராயி விற்றுக் குடும்பம் நடத்தி வந்தாள்.

ஒருநாள் வீரனுக்கு மீன்கறி சாப்பிட ஆசை ஏற்பட்டது. அன்று தான் பிடித்து வந்த மீன்களை விற்கக் கூடாது என்றும் தனக்குக் கறி சமைத்துப் போட வேண்டும் என்றும் வீராயிடம் கூறித் தகராறு செய்தான். வீராயி என்ன சொல்லியும் அவன் கேளாது போகவே முடிவில் அவள் "சரி. இந்த மீன்களை நாற்றம் போக கழுவி எடுத்து வா" என்றாள்.

அவனும் கூடையில் மீன்களைப் போட்டுக் கொண்டு கழுவி எடுத்து வரச் சென்றான். அப்போது செல்லய்யா என்பவன் அவனைக் கண்டு "என்ன வீரா! எங்கே போகிறாய்?" என்று கேட்டான். வீரனும் "இந்த மீன்களை நல்ல நீரில் கழுவி எடுத்து வர குளத்திற்குப் போகிறேன். இன்று என் மனைவி மீன்கறி செய்யப் போகிறாள்" என்றான்.

செல்லய்யாவும் "மீனைக் கழுவினால் மட்டும் அதன் நாற்றம் போய் விடுமா? இவற்றை உலர வைக்க வேண்டும். அப்போதுதான் போகும். நீ இந்த மீன்களை என்னிடம் கொடு. நான் என்னிடம் உள்ள நான்கு உலர்ந்த மீன்களை கொடுக்கிறேன் அவற்றை எடுத்துக் கொண்டு போய் உன் மனைவியிடம் கொடுத்துக் கறி சமைக்கச் சொல்" என்றான். வீரனும்

-கி. அருணா-



தன் மீன்களைக் கொடுக்க செல்லய்யா தன் கூடையிலிருந்து நான்கு உலர்ந்த மீன்களைக் கொடுத்தான்.

செல்லய்யா அந்த மீன்களை ஒரு மீன் வியாபாரியிடமிருந்து திருடி எடுத்து வந்து கொண்டிருந்தான். அந்த மீன்கள் தன்னிடம் இருந்தால் திருட்டு வெளிப்பட்டு விடும் என்று எண்ணியே அவற்றை வீரனுக்குக் கொடுத்து விட்டான். வீரனும் அவற்றை எடுத்துப் போய் தன் மனைவியிடம் கொடுத்து "இதைக் கறியாக்கு" என்றான்.

வீராயி "இவை நீ கொண்டு போன மீன்கள் அல்லவே. எங்கிருந்து இவை கிடைத்தன?" என்று கேட்கவே வீரன் நடந்ததைக் கூறினான். அவளும் அதில் ஏதோ சூது இருக்கிறது என நினைத்து அதில் ஒரு மீனை மட்டும் எடுத்துக் கொண்டு மற்ற மூன்றையும் விற்று வரும்படி வீரனை அனுப்பினாள்.

வீராயி தான் எடுத்த மீனை அரிந்தபோது அதனுள்ளிருந்து 'பளபள'வென மின்னும் ஒரு வைரக்கல் வெளியே விழுந்தது. ஒரு வியாபாரி தன்னிடமிருந்த வைரங்களை பத்திரமாக எடுத்துச் செல்ல அவற்றைச் சில மீன்களின் வயிற்றில் வைத்திருந்தான். அந்த வியாபாரியின் நான்கு மீன்களைத்தான் செல்லய்யா திருடி எடுத்து வந்தான்.

வியாபாரி மன்னனிடம் போய் தன் நான்கு மீன்கள் திருடு போயின என்றும் அவற்றில் வைரக் கற்களை வைத்திருந்ததாகவும் கூறிப் புகார் செய்தான். மன்னனும் வீரர்களிடம் "உலர்ந்த மீன்கள் வைத்திருப்பவர்களை எல்லாம் பிடித்து வாருங்கள்" என்று கட்டளை இட்டான். வீரன் அந்த வீரர்களிடம் அகப்படவே அவர்கள் அவனை மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

வியாபாரியும் அந்த மீன்களைப் பார்த்து "இவை என் மீன்களே. ஆனால் மூன்றுதானே இருக்கின்றன. இன்னொன்று இல்லையே" என்றான். மன்னனும் வீரனிடம் "நீ இவற்றை இந்த வியாபாரியிடமிருந்து திருடினாயா?" என்று கேட்டான்.

வீரனோ "இல்லை. என் மீன்

களுக்கு பதிலாக செல்லய்யா நான்கு மீன்களைக் கொடுத்தான். அவற்றில் ஒன்றை என் மனைவியிடம் கறி சமைக்கக் கொடுத்துவிட்டு மீத மூன்றை விற்க எடுத்து வந்தேன்" என்றான்.

வீரர்கள் உடனே வீரனின் வீட்டிற்குப் போய் வீராயியையும் அவள் அரிந்து வைத்திருந்த மீனையும் அதிலிருந்த வைரத்தையும் எடுத்துக் கொண்டு வந்தார்கள். மன்னன் செல்லய்யாவையும் பிடித்து வரச் சொன்னான். வீரர்கள் அவனையும் பிடித்துக் கொண்டு வந்தார்கள்.

செல்லய்யா தனக்கு அந்த மீன்கள் பற்றி எதுவுமே தெரியாது என்று ஒரேயடியாகச் சாதித்தான். மன்னனும் "இவற்றில் வைரங்கள் இருந்தன. இவற்றை நீ கொடுக்கவில்லை. எனவே இந்த வைரங்கள் வீரனுடையதே" எனக்கூறி மற்ற மூன்று மீன்களில் வியாபாரி வைத்திருந்த வைரங்களையும் வீரனிடம் கொடுத்தான்.

செல்லய்யா மீனின் வயிற்றிலிருந்து கிடைத்த வைரங்கள் வீரனுக்கா போவது என்று எண்ணி ஆத்திரப்பட்டான். அதனால் அவற்றைத் தானே அடைந்து விட எண்ணி அம்மீன்கள் தன்னுடையதே எனக் கூறி விடத் தீர்மானித்தான்.

அப்போது செல்லய்யா "நான் தான் இந்த மீன்களை வீரனுக்குக் கொடுத்தேன். அந்த வைரங்கள் என்னுடையதுதான்" என்றான். அடுத்த சில விநாடிகளில் மன்னன் அதட்டி மிரட்டிக் கேட்டு உண்மையை வரவழைத்து விட்டான். செல்லய்யாதான் மீன்களை திருடியவன் என்பது ருசுவாகி விட்டது. மன்னன் அவனை தண்டித்து வைரங்களை வியாபாரியிடம் கொடுத்தான்.

வியாபாரியும் வீரனுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்கவே அதைக் கொண்டு அவன் மீன் வாங்கி தன் மனைவியிடம் கொடுத்தான். அவளும் அவனுக்கு மீன்கறி செய்து போட்டாள்.



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 ஜுன் மாத இதழில் வெளியிடப்படும்**



Shanbagavalli



Sundaramurthy

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஏப்ரல் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026**

---

## பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **ஆடி மகிழும் சிறுமி இவள்!**

இரண்டாவது போட்டோ : **ஆட்டி வைக்கும் சக்தி அவள்!!**

பரிசு பெற்றவர் : **மா. சாந்தி, திருவள்ளூர்-602001.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றுார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 117.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 123.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

# என்ன அதிசயம்!

மகிழ்ச்சியான மாலை நேரம் ராஜு பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்து கொண்டிருந்தான். திடீரென்று பலமான காற்று வீசத் தொடங்கியது. ஆகாயத்திலிருந்து பறந்து வந்த ஒரு பறக்கும் தட்டு ராஜுவின் முன்னால் வந்து நின்றது.

ஒரு குள்ளமான உருவம் அதிலிருந்து வெளிப்பட்டு ராஜுவிடம் பேசத் தொடங்கியது.

"என்னுடைய சிநேகிதனாக இருப்பியா?"

"அ.அ. ஆனா நீ யாரு?"

"செவ்வாய் கிரகத்திலிருந்து வந்திருக்கேன் இங்கே சிநேகம் செய்ய."

நடந்தது என்ன என்றறியும் முன்பே ராஜு சம்மதித்து விட்டான்

"சரி"

"அப்படின்னா, நம்ம சிநேகிதத்தின் அடையாளமா இதை எடுத்துக்க. இது எனக்கு ரொம்ப பிடிச்சது. உங்க பூலோகத்தின் அதிசயம்."

"அதிசயம்"

"நிச்சயமா! கொட்டை இல்லாத, தோல் இல்லாத, மாம்பழத்தின் ருசி"

"மாம்பழமா? இந்த குளிர்காலத்திலா? சீக்கிரம் கொடு"

"சரி... வாயைத் திற, கண்ணை இறுக்கமா மூடிக்க, எனக்கு பிடிச்ச மேங்கோ பைட்டை சாப்பிடு"

"ஆ... மேங்கோ பைட்"

ராஜுவின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவனுக்குப் பிடித்தமான மேங்கோ பைட் செவ்வாய் கிரகத்தின் விருப்பமாகவும் உள்ளது.













பார்லே

மேங்கோ பைட்